# ஸ்ரீ ராமாநுஜன். 130-131.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக

மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 11 | 1959ஆ அக்டோபர், நவம்பர்மீ<br>விகாரிஆ ஐப்பசி, கார்த்திகைமீ | மலர் 10, 11 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி 22.



முன்னமழகரெழில் மூழ்குங் குருகையர்கோன் *
இன்னவளவென்ன எனக்கரிதாய்த்து — என்ன *
கரணக்குறையின் கலக்கத்தை * கண்ணன்
ஒருமைப்படுத்தா னொழித்து. **(22)**

| | | | |
|---|---|---|---|
| முன்னம் | முந்தின பதிகத்தில் | கண்ணன் | எம்பெருமான் |
| அழகர் | திருமாலிருஞ்சோலை யழகருடைய | கரணம் குறையின் கலக்கத்தை | (ஆழ்வார் தமக்குக்) கரணஸங்கோச நிபந்தனமென்று உண்டான கலக்கத்தை |
| எழில் | வடிவழகிலே | ஒழித்து | போக்கி |
| மூழ்கும் | ஆழங்காற்பட்ட | ஒருமைப் படுத்தான் | (ஆழ்வாரை) ஆச்வஸிப்பித்தான். |
| குருகையர்கோன் | ஆழ்வார் | | |
| இன்ன அளவு என்ன எனக்கு அரிது ஆய்த்து என்ன | ‘இது இவ்வளவென்று பரிச்சேதிக்க என்னால் முடியவில்லையே!’ என்று தளர்ச்சியடைய | | |



*** மிக்க தாஹங்கொண்டவன், நல்ல தீர்த்தம் ஸமீபித்திருக்கச்செய்தே வாய் மூடிக் கிடந்தால் துடிக்குமாபோலே, ஆழ்வாரும், தமக்குப் பரமபோக்யமான விஷயம் ஸமீபித்தாய்த் தமக்கு ஆசையும் மிக்கிருக்கச்செய்தே, விஷயத்தின் பெருமையாலே அது தம்மால் அநுபவிக்க அஸாத்யமாகவே, ‘ப்ரக்ருதி ஸம்பந்தம் காரணமாக நம்முடைய கரணங்கள் ஸங்குசிதங்களாயிருக்கையாலன்றோ பகவத் விஷயத்தை நாம் பரிபூர்ணமாக அநுபவிக்க முடியாமல் துவள்கிறோம்’ என்று கொண்டு வருத்தமுற்றவராய், எம்பெருமான் விசாலமான திருவுள்ளங்கொண்டு செய்தருளின கரணகளேபர ப்ரதானமும், ஜகத்தில் அப்பெருமான் பண்ணின பலபல திருவவதாரங்களும் என்னளவில் பயன்பட வில்லையே!; நான் ப்ரக்ருதி ஸம்பந்தம் கழிந்து எம்பெருமானைப் பெற்று முற்றூட்டாக அநுபவித்து ஆனந்திக்க அவகாசமில்லையாகிறதே!; என்று நினைந்து நைந்து உள் கரைந்துருகியிருக்க, அவ்வளவிலே எம்பெருமான், அவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களும் இழக்க வேண்டாதபடி தான் திருவேங்கட மலையில் நின்றருளினபடியைக் காட்டி ஆழ்வாரை ஒருவாறு ஸமாதானப்படுத்தத் திருவுள்ளங்கொண்டு, ’ஆழ்வீர்! நீர் என் துவள்கின்றீர்? நம்மைப் பூர்ணமாக அநுபவிக்க முடியாமைக்குக் காரணம் கரணஸங்கோசமென்று நீர் நினைக்கின்றீர் போலும்; அங்ஙனம் நினைக்க

வேண்டா; கரணஸங்கோசமில்லாதவர்களான அமரர்களும் நம்மை அநுபவிக்குமிடத்து, அவர்களும் உம்மைப்போலவே யன்றோ துவள்வது; விஷயம் அளவிட முடியாததாகையாலே பரிபூர்ணாநுபவம் செய்யமுடியவில்லையே யென்கிற தளர்ச்சி உம்மோடு அமரர்களோடு வாசியற அனைவர்க்கும் பொதுவானதே காணும்; அதுபற்றி நீர் தளரவேண்டா; நீர் நினைத்தபடியெல்லாம் நம்மோடு பரிமாறலாம்படி நாம் வடக்குத் திருமலையிலே நின்றநிலையில் கிட்டியநுபவித்து மகிழ்வீர்' என்ன; ஆழ்வாரும் ஒருவாறு ஸமாதான மடைந்துஇனிமையோடே தலைக்கட்டுகிறார்; *தலைப்பெய் காலமென்கிற பத்தாம் பாட்டில் இனிமை காணத்தக்கது.

பட்டர் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கையில் பகவத்விஷய காலக்ஷேபம் நடவா நிற்க, இத்திருவாய்மொழி வந்தவாறே சீராமப்பிள்ளை கேட்டார்;—ஆழ்வார் இப்போது பரமபதாநுபவத்தை ஆசைப்பட்டிருந்தாராகில் அது ஒரு தேசவிசேஷத்திலே சென்று அநுபவிக்கவேண்டியதாகையாலே இங்குக் கிடைக்கவில்லையே! என்று துடிக்கலாம்; இப்போதோ இவர்க்குப் பரமபதாநுபவம் விவக்ஷிதமாக இல்லை; ராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் அநுபவிக்க ஆசை கொண்டிருந்தாலும் அவை ஒரு காலவிசேஷத்தில் கழிந்துவிட்டனவே! என்றுவது துடிக்கலாம்; இப்போது அவதாரங்களில் அநுபவாபேக்ஷை சென்றதாக இல்லாமையாலே அந்தத் துடிப்புக்கும் அவகாசமில்லை; கீழே நடந்த திருவாய்மொழியோ *முடிச்சோதியாய்* என்பது: அழகர் திருமலையிலே அநுபவிக்க இழிந்தவரிவர் என்பது அதனால் ஸ்பஷ்டமாகின்றது; அர்ச்சாவதாரத்திலுண்டான அநுபவாபேக்ஷை தலைக்கட்டாமற் போகக் காரணமில்லையே; மேன்மேலும் மனோரதப்படி அநுபவிக்கலாமே; இழந்து நோவுபடுவானென்?—என்று. அதற்கு பட்டர் அருளிச்செய்த ஸமாதானம் :—ஆழ்வார் அநுபவிக்க ஆசைப்பட்டவிடம் பரமபதமானாலென்ன? வ்யூஹமானாலென்ன? விபவாவதாரமானாலென்ன? அர்ச்சாவதாரமானாலென்ன? அதுபற்றி ஒரு வாசியில்லை. தர்மியின் ஐக்யத்தாலே விஷயம் எங்கும் ஒரு படிப்படப் பூர்ணமாகவேயுள்ளது. அர்ச்சாவதாரங்களை நாமெல்லோரும் அநுபவிப்பது போலன்றே ஆழ்வார் அநுபவிப்பது. அங்கும் விஷயத்தைப் பூர்ணமாக அநுபவிக்க ஆசைப்பட்டார்; அது அஸாத்யமானமையாலே தளர்ந்தார்—என்று. .... (22)

Released by Maran's Dog ,Toronto, Canada

## திருவாய்மொழி நூற்றந்தாதி—23

ஒழிவிலாக் கால முடனாகி மன்னி*
வழுவிலா வாட்செய்ய மாலுக்கு*—எழுசிகர
வேங்கடத்துப் பாரித்த மிக்கநலஞ் சேர்மாறன்
பூங்கழலை நெஞ்சே புகழ்.

Released by Maran's Dog ,Toronto, Canada

| | | | |
|---|---|---|---|
| ஒழிவு இலா காலம் | —ஸதாகாலமும் | எழுசிகரம் வேங்கடத்து பாரித்த | ஓங்கின சிகரங்களையுடைய திருமலையிலே மனோரதித்த |
| உடன் ஆகி மன்னி | கூடவே பிரியாது பொருந்தியிருந்து | மிக்க நலம் சேர் மாறன் | மஹாகுணசாலியான ஆழ்வாருடைய |
| மாலுக்கு | திருவேங்கடமுடையானுக்கு | பூ கழலை | பொலிவுற்ற திருவடிகளை |
| வழு இலா | வழுவின்றிக்கே | நெஞ்சே | எனது மனமே! |
| ஆள் செய்ய | அடிமை செய்யுமாறு | புகழ் | போற்றுவாயாக. |

எம்பெருமானே! உன்னையநுபவிப்பதற்கு இடையூறான பிரகிருதியைப் போக்கித்தரவேணுமென்று கீழ்த்திருவாய்மொழியில் பிரார்த்தித்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான்

Released by Maran's Dog ,Toronto, Canada

'ஆழ்வீர்! நம்மோடுபரிமாறுவதற்கு அந்தப் பிரகிருதி உமக்கு இடையூறன்று காணும்; அநுகூலமேயாகும். இந்த பிரகிருதியோடே கூட உம்மை அடிமைகொள்ள வேணுமென்று விரும்பியன்றோ நாம் திருமலையிலே நிற்கிறது; நீர் இங்கேறப் போந்து அடிமை செய்து வாழலாமே' என்று, தான் திருவேங்கடமலையில் நின்றருளுகிறபடியைக் காட்டியருளக் கண்டு ஸமாதானமடைந்தவராய் அத்திருமலையப்பன் திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட வடிமைகளுஞ் செய்யவேணுமென்று பாரித்தார் *ஒழிவில் காலமெல்லாமென்கிற திருவாய்மொழியில்—என்கிறது.

"காலமெல்லாம் அடிமை செய்யவேண்டும்" என்றாலே போதுமாயிருக்க, ஒழிவில் காலமெல்லாம் என்று விசேஷித்துக் கூறினதற்குச் சில ஆசாரியர்கள் ஒரு விசேஷார்த்தம் கூறுவர்களாம்; அதாவது—இனிமேல்வரும் காலங்களில் மாத்திரம் கைங்கரியம் செய்ய விரும்புகிறாரல்லர்; கீழ்க்கழிந்த காலங்களிலும் கைங்கரியம் செய்ய விரும்புகிறார் என்று. கழிந்துபோனகாலத்தை மீட்கமுடியாததனால் இந்த அர்த்தம் எங்ஙனேபொருந்துமெனில்; கீழ்க்கழிந்த காலத்திலும் கைங்கரியம் செய்யவேணுமென்று பாரிக்கிறாராகச் சொல்லுகிறவிதற்குக் கருத்து யாதெனில்; 'அந்தோ! கீழே வெகு காலம் வீணாகக் கழிந்துவிட்டதே! என்கிற இழவு நெஞ்சிற்படாதபடி அதைமறந்து ஆனந்தமயமாகக் கைங்கரியம் பண்ணப் பாரிக்கிறாரென்பதுவேயாம். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின் :—"ஒழிவில் காலமெல்லாமென்று கீழேகழிந்த காலத்தையுங் கூட்டி அடிமை செய்யப்பாரிக்கிறாரென்று இங்ஙனே அதிப்ரஸங்கம் சொல்லுவாருமுண்டு; அதாகிறது, கீழ்க்கழிந்த காலத்தை மீட்கையென்று ஒரு பொருளில்லையிறே......கீழ்க்கழிந்த காலத்திலிழவு நெஞ்சிற்படாதபடி மறப்பிக்கையேயிறே யுள்ளது" என்று.

உடனாகி என்பது ஸகல தேசங்களிலும் விடாதே தொடர்ந்து அடிமை செய்யவேணுமென்கிற பாரிப்பைக் காட்டுகிறது. இங்குச் சிலர் சங்கிப்பதாவது—திருவேங்கடமுடையானுக்கன்றோ இங்கு அடிமை செய்யப்பாரிப்பது; அப்பெருமான் நியதமாக ஒரு தேசவிசேஷத்திலேயே எழுந்தருளியிருப்பதனால் 'ஸகல தேசங்களிலும் விடாதே' என்று இங்குச் சொல்வதற்கு ப்ரஸக்தியில்லையே என்று. இதற்கு ஸமாதானமாவது—புறப்பாடு கண்டருளிப் பலவிடங்களுக்கும் எழுந்தருள்வதுண்டாகையாலே அவ்விடமொன்றும் தப்பாமே எங்கும் அடிமை செய்யப்பாரித்தலில் குறையில்லையென்க. (ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்) "ஸ்ரீரங்கராஜகரஸம்ஸ்ரித சாகிகாப்ய: லக்ஷ்மீ ஸ்வஹஸ்தகலிதச்ரவணவதம்ஸம்" என்கிற ச்லோகத்திற்படியே பரோக்ஷமான புறப்பாடுகளுமுண்டே அர்ச்சாவதாரப் பெருமானுக்கு; அப்போதும் விடாதே தொடர்ந்து அடிமை செய்ய விரும்புவதும் இங்கு விவக்ஷிதம். மன்னி என்பதனால் பெருமானும் பிராட்டியுமாய்த் திரையை வளைத்துக்கொண்டிருந்தாலும் அப்போதும் படிக்கம் குத்துவிளக்கு முதலியனபோலே நின்று அந்தரங்கமான அடிமைகளைச் செய்யவேணுமென்ற விருப்பம் விளங்கும். .... .... .... (23)

## அன்பர்களுக்கு அறிவிப்பு.

ஸ்ரீராமாநுஜனில் நாம் வெளியிடும் விஷயங்கள் அன்று பார்த்துவிட்டு எறிந்துவிடக் கூடியவையாக அல்லாமல் எப்போதும் காப்பாற்றி வைத்துக் கொண்டு அடிக்கடி அநுபவிக்க

வேண்டியவைகளாக அமைக்கப்படுகின்றன வென்பதை அன்பர்கள் அறிந்தேயுள்ளார்கள். வியாக்கியான நூல்களும் இதில் சேர்த்து வெளியிடப்பட்டு வருகின்றன வென்றபடி. அத்தகைய நூல்களை ஸஞ்சிகையிலிருந்து பிரித்துத் தனியே யெடுத்துப் புத்தகமாக்கிக் கொள்ள வேண்டியிருப்பதனாலே அதற்கு ஸௌகர்யமாம்படி செய்யப்படுமினி. அதாவது, உபந்யாஸ ரூபங்களான வியாஸங்களோடு சேர்த்து அவற்றினிடையே வியாக்கியான நூல்கள் வெளியிடப்பட மாட்டா; இவை தனி ஸஞ்சிகையாகவே வெளியிடப்படும். உபந்யாஸங்களுள்ள ஸஞ்சிகைகள் தனிப்படவும், வியாக்கியானங்களுள்ள ஸஞ்சிகைகள் தனிப்படவும் வெளியிடப்பட்டு வருமென்றபடி. இந்த ரீதியில் இன்று வியாக்கியான ஸஞ்சிகை வெளியிடப்படுகிறது.

பிள்ளைப் பெருமாளையங்கார் பணித்த அஷ்டப் பிரபந்தமென்பது தமிழுலகில் மிகவும் ப்ரஸித்தமானது. அவ்வெட்டுப் பிரபந்தங்களையும் வாசித்துப் பொருளுணர்ந்து களிக்க வேணுமென்னுமாவல் பலர்க்குமுண்டு. அதற்குப் பரிபூர்ண ஸௌகரிய மில்லாமையினாலே பலர் சிரமப்படுகின்றார்கள். அந்த சிரமம தீருவதற்காகவே நாம் அஷ்டப் பிரபந்த விளக்கவுரை வெளியிடத் தொடங்கி யிருக்கின்றோமிப்போது. முதலில் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியுரை வெளியிட ஆரம்பமாகிறது. இவ்வகையில் அடைவே மற்றைப் பிரபந்தங்களினுரையும் பூர்த்தியாகும். இவ்வுரைகொண்டு வெளிவரும் ஸஞ்சிகைகளைச் சேமித்து வைத்திருந்து பிறகு புத்தகமாக்கிக் கொள்வது.

கம்பரின்பக் கவித்திரட்டும் அதிகார சங்கிரகவுரையும் பண்டே பிரசுரிக்கத் தொடங்கப்பட்டவையாதலால் அவற்றுக்கு மட்டும் இந்த நிபந்தனை வைத்துக்கொள்ளவில்லை.

## நாலாயிர திவ்யப் பிரபந்த மூலம்.

நாலைந்து வருடங்களுக்கு முன்பு நாலாயிர திவ்யப்பிரபந்த மூலம் பதிப்பித்திருந்தோம். அப்புத்தகம் ஆறுமாதங்களாகவே ஸ்டாக்கில்லை. மறுபதிப்பு நிகழ்ந்து வருகின்றது. அச்சு முடிவதற்கு நாலைந்து மாதமாகும். தெலுங்கு லிபியில் நாலாயிரம் மூலம் பூர்த்தியாகியுள்ளது. தனித்தனியாயிரமாகவும் கிடைக்கும். ஒவ்வோராயிரத்திற்கும் தனியே விலை ரூ. 2/-. ஒரே ஸம்புடமாகவுள்ளதற்கு விலை ரூ. 7/-. கிடைக்குமிடம், க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம். .... .... .... .... .... .... (*)

## அம்ருதலஹரீ பத்ரிகை.

ஸ்ரீரங்கத்திலிருந்து பதினைந்து வருடங்களுக்கு மேலாக வெளிவந்து கொண்டிருக்கும் அம்ருதலஹரீ பத்ரிகையை ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் அவசியமநுபவிக்க வேணும். இது மாதந்தோறும் வெளிவருகின்றது, பலபல அபூர்வ விஷயங்களைக் கொண்டுள்ளது. வருடச் சந்தா ரூ. மூன்று மட்டும். கிடைக்குமிடம். ஸ்ரீவிலாஸம் அச்சுக்கூடம், கீழ்ச்சித்திரை வீதி. ஸ்ரீரங்கம், திருச்சி 6. சந்தாபணம் அவ்விடத்திற்கே அனுப்பவேணும்

ஸ்ரீ

திவ்வியகவி பிள்ளைப்பெருமாளையங்கார் பணித்த

# அஷ்டப் பிரபந்தம்



ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்

எழுதிய

விளக்க வுரையோடு கூடியது

ஸ்ரீராமாநுஜன் வெளியீடு

கிடைக்குமிடம் :

P. B. ANNANGARACHARYA

க்ரந்தமாலா ஆபீஸ், சின்னகாஞ்சீபுரம்.

1959—1960.

ஸ்ரீ

# அஷ்டப் பிரபந்த விளக்கம்

'திவ்வியகவி பிள்ளைப் பெருமாளையங்கார்' என்று பிரசித்தி பெற்ற அழகிய மணவாளதாசர் இயற்றிய அஷ்டப்பிரபந்தம் இலக்கிய நூல்களுள் மிகச் சிறந்து விளங்குவது. "சொல்நோக்கும் பொருள் நோக்கும் தொடை நோக்கும் நடை நோக்கும் துறையின் நோக்கும் எந்நோக்குங்காண இலக்கியமாவது" இது.

திருவரங்கக் கலம்பகம்.
திருவரங்கத்து மாலை.
திருவரங்கத் தந்தாதி.
சீரங்கநாயகரூசல்
திருவேங்கடமாலை
திருவேங்கடத்தந்தாதி
அழகரந்தாதி
நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி

என்னுமிவை அஷ்டப்பிரபந்தமென வழங்கப் பெறும். ஸ்ரீவைஷ்ணவஸம் பிரதாயத் தலைவரான எம்பெருமானார் அருளிச் செய்த சரணாகதிகத்யம், ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம் என்னுமிவை பிற்காலத்தவர்களால் **கத்யத்ரயம்** என வழங்கப் பட்டது போலவே இப்பிரபந்தங்களும் பிற்பட்டவர்களால் அஷ்டப் பிரபந்தமென் றொரு தொகுதியாக வழங்கப்பெற்றது. எனவே, நூலாசிரியர் அஷ்டப் பிரபந்த மென்று பெயரிட்டாரல்லர் என்றதாயிற்று. "அஷ்டப்பிரபந்தம் கற்றவன் அருமைப் புலவன்" என்னும் வழக்கச் சொல்லினால் இதன் அருமைபெருமை விளங்கும். அந்தாதி பாடுதலிலும், யமகம் திரிபு சிலேடை முதலிய சொல்லணிகளை யிட்டுப் பாடுதலிலும் இவ்வாசிரியர் நிகரற்ற நிபுணர்.

கூரத்தாழ்வான் திருக்குமாரரும் உலகம் நிறைந்த புகழாளருமான பட்டருடைய திருவடிகளை ஆச்ரயித்து உய்ந்தவரான இவ்வாசிரியர்க்கு ஆழ்வார்களிடத்திலும் ஆசிரியர்கள் பக்கலிலும் அளவு கடந்த பக்தி விளங்குவது ஆச்சரிய மன்று. பெரும்பாலும் ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப் பின்பற்றியே இவ்வஷ்டப்பிரபந்தம் அவதரித்துள்ளது. இவ்வாசிரியர் தென்மொழியிற் போலவே வடமொழியிலும் தேர்ச்சி பெற்றவர் என்பது இவரது நூல்களினால் நன்கு விளங்கும். ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கு இவ்வஷ்டப்பிரபந்தம் நிதிபோன்றதென்பர்.

கீர்த்திமூர்த்தியாய் விளங்கும் வை. மு. சடகோப ராமாநுஜாசாரியார் ஸ்வாமிகள் இவ்வஷ்டப்பிரபந்தத்திற்கு விரிவுரையியற்றி வெளியிட்டுள்ளாரெனினும் அவ்வுரை இப்போது கிடைப்பது அரிதாயிருத்தலாலும் அவ்வளவு விரிவு வேண்டாதாரை உகப்பிக்க வேண்டியும் மூலத்தின் பொருள் ஐயந்திரிபற விளங்கும்படியானதோர் விளக்கவுரையை யெழுதி வெளியிட எனது நண்பர்கள் சிலர் நியமித் தருளினராதலால் இச் சுருக்கவுரை தோன்றுகின்றது. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி முந்துற முன்னம் உரைசெய்யலாகிறது.

# நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

பொய்கையாழ்வார் முதலாகத் திருமங்கையாழ்வார் முடிவாகவுள்ள ஆழ்வார்கள் பதின்மரும், பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையான ஆண்டாளும் பாடிய திவ்வியப் பிரபந்தங்களில் மங்களாசாஸனம் செய்யப்பெற்றவை நூற்றெட்டுத் திருப்பதிகளாம். சோழ நாட்டில் நாற்பது; பாண்டி நாட்டில் பதினெட்டு; மலை நாட்டில் பதின்மூன்று; நடுநாட்டில் இரண்டு; தொண்டை நாட்டில் இருபத்திரண்டு; வட நாட்டில் பன்னிரண்டு; திருப்பாற்கடல், திருநாடு என்பன நூற்றெட்டுத் திருப்பதிகளாகக் கருதப்படுகின்றன. ஒவ்வொரு திருப்பதிக்கும் ஒவ்வொரு செய்யுளிட்டுத் துதி செய்வது இப்பிரபந்தம். முழுதும் அந்தாதித் தொடை வாய்ந்த வெண்பாவினால் அமைந்தது. .... ... .... .... *

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்கார் பணித்த அஷ்டப் பிரபந்தத்தினுள்

# நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.

[ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசார்யர் இயற்றிய விளக்கவுரையோடு கூடியது]

சிறப்புப் பாயிரம்

**ஏற்றமண வாள ரிசைத்தாரந் தாதிவெண்பா**
**தோற்றக்கே டில்லாத தொன்மாலைப்—போற்றத்**
**திருப்பதியா நூற்றெட் டினையுஞ்சே விப்போர்**
**கருப்பதியா வண்ணமுண்டா க.**

| | | | |
|---|---|---|---|
| திருப்பதி ஆம் நூற்றெட்டினையும் | திவ்ய தேசங்கள் நூற்றெட்டையும் | தோற்றம் கேடு இல்லாத தொல் மாலை போற்ற | பிறப்பு மிறப்புமில்லாத புராண புருஷனைச்சொல்லித் துதிக்கும்படியாக |
| சேவிப்போர் | ஸேவிப்பவர்கள் | ஏற்ற மணவாளர் | பொருந்திய ஞான சக்திகளையுடைய அழகிய மணவாளதாசர் |
| கரு பதியாவண்ணம் உண்டாக | மீண்டு மீண்டும் கர்ப்ப பிண்டத்தில் சேராதபடிக்கு [பிறப்பின்றி முத்திபெறுமாறு] | அந்தாதி வெண்பா இசைத்தார் | வெண்பாவினாலாகிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியைப் பாடினர். |

---

— பிரபந்தத் தொடக்கம் —

ஆழ்வார்கள் பன்னிருவர் காப்பு.

**பொய்கைபூ தன்பேயார் பொன்மழிசைக் கோன்மாறன்**
**செய்ய மதுரகவி சேரர்பிரான்—வையகமெண்**
**பட்டர்பிரான் கோதைதொண்டர் பாதப் பொடிபாணன்**
**கட்டவிழ்தார் வாட்கலியன் காப்பு.**

(பொழிப்புரை) பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் நம்மாழ்வார் குணசாலியான மதுரகவியாழ்வார் குலசேகராழ்வார் உலகத்தாரால் நன்கு மதிக்கப்பெற்ற பெரியாழ்வார் ஆண்டாள் தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பாணாழ்வார் விகஸித்த மாலையையணிந்தவரும் வாட்படையையுடையவருமான திருமங்கையாழ்வார் ஆகிய பன்னிருவர் நமக்கு ரக்ஷகராகுக. .... .... *

நம்மாழ்வார் காப்பு.

**பிறவாத பேறு பெறுதற்கென் ஞான்றும்**
**மறவா திறைஞ்சென் மனனே!—துறவாளன்**
**வண்குருகூர் வாவி வழுதிவள நாடுடைய**
**தண்குருகூர் நம்பிதிருத் தாள்.**

| | | | |
|---|---|---|---|
| என் மனனே | எனது நெஞ்சமே ! | தன் குருகூர் நம்பி | நம்மாழ்வாருடைய |
| துறவு ஆளன் | விஷய விரக்தி பூண்டவரும் | திருத் தாள் | திருவடிகளை |
| வள் குருகு ஊர் வாவி வழுதி வளம் நாடு உடைய | அழகிய நீர்ப்பறவைகள் உலாவப் பெற்ற ஜலாசயங்கள் சூழ்ந்த பாண்டி நாட்டுத் தலைவருமான | பிறவாத பேறு பெறுதற்கு என்ஞான்றும் மறவாது இறைஞ்சு | மீண்டு மீண்டும் பிறவாமையாகிறபேறுபெறுதற்காக எப்போதும் மறவாமல் வணங்கு. |

எம்பெருமானார் காப்பு.

**முன்னே பிறந்திறந்து மூதுலகிற் பட்டவெல்லாம்**
**என்னே மறந்தனையோ என்னெஞ்சே !—சொன்னேன்**
**இனியெதிரா சன்மங்கள் இன்றுமுதல் பூதூர்**
**முனியெதிரா சன்பேர் மொழி.**

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சே ! | எனது மனமே!, | சொன்னேன் | உனக்கு ஒருறுதி கூறுகின்றேன் ; (அதாவதென்னென்னில் ;) |
| முன்னே | இதற்கு முற்காலமெல்லாம் | | |
| பிறந்து இறந்து | பிறப்பது மிறப்பதுமாகி | இன்று முதல் | இன்று தொடங்கி |
| மூது உலகில் பட்ட எல்லாம் | அநாதி ஸம்ஸாரத்தில் பட்ட பாடுகளையெல்லாம் | பூதூர் முனி எதிராசன் பேர் மொழி | பெரும்பூதூர் மாமுனியாகிய எதிராசருடைய திருநாமங்களை யோது ; (அங்ஙனம் செய்தால்) |
| மறந்தனையோ | மறந்து விட்டாய்போலும் ; | | |
| என்னே | உன் பேதைமையை என் சொல்லுவது ? | சன்மங்கள் இனி எதிரா | பிறவிகள் இனி உனக்கு உண்டாகமாட்டா. |

கூரத்தாழ்வான் காப்பு.

**முக்கால மில்லா முகில்வண்ணன் வைகுந்தத்து**
**எக்காலஞ் செல்வா னிருக்கின்றேன்—தக்காரெண்**
**கூரத்தாழ் வானடியைக் கூடுதற்கு நாயடியேன்**
**போரத்தாழ் வானசடம் போட்டு.**

| | | | |
|---|---|---|---|
| நாய் அடியேன் | நீசனான அடியேன் | முக்காலம் இல்லா முகில் வண்ணன் வைகுந்தத்து | காலம் நடையாடாத எம்பெருமானது திருநாட்டிலே |
| போர தாழ்வு ஆன சடம்போட்டு | மிக இழிவான ஜடப்பொருளாகிய இவ்வுடலை இங்கு விட்டிட்டு | | |
| தக்கார் எண் கூரத்து ஆழ்வான் அடியை கூடுதற்கு | யோக்யர்கள் சிந்திக்கும் கூரத்தாழ்வான் திருவடிகளைச் சேர்வதற்கு | எக் காலம் செல்வான் இருக்கின்றேன் | என்றைக்குச் சென்று சேரப்போகிறேனோ ?* |

* * *—இந்நூலாசிரியரான ஐயங்கார் பட்டர்திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவராதலால் அவ்வாசிரியருடைய திருத்தகப்பனரென்னுங் காரணத்தினாலும், நமக்குத் தந்தையான அமுதனாருடைய ஸாக்ஷாதாசார்யரென்னுங் காரணத்தினாலும் கூரத்தாழ்வானைக் குறித்தபடி.. பரமபதம் சேர்தலை ஆசார்யன் திருவடி சேர்தலாக வழங்குகிற ஸம்பிரதாயம் இச்செய்யுளில் தெரிவிக்கப் பட்டமை காண்க. உடல் அறிவில்லாத பொருளாதலால் ஜடமெனப் பட்டது. .... .... *

ஸ்வாசார்யரான பட்டர் காப்பு.

**நான்கூட்டில் வந்தவன்றே நானறியா நன்மையெல்லாம்**
**தான்கூட்டி வைத்தநலந் தான்கண்டீர்—ஆங்கூட்டச்**
**சிட்டருக்கு வாய்த்த திருவரங்க னின்னருளால்**
**பட்டருக்காட் பட்ட பயன்.**

| | | | |
|---|---|---|---|
| கூட்டம் ஆம் சிட்டருக்கு வாய்த்த | திரள் திரளான மஹான்களுக்குப் பாக்கியமாக வாய்த்த | நான் அறியா நன்மை எல்லாம் | நானறியாத நலங்களையெல்லாம் |
| திரு அரங்கன் | ஸ்ரீரங்கநாதனுடைய | தான் கூட்டி வைத்த நலம் | தான் உண்டாக்கிய நன்மை யென்பது |
| இன் அருளால் | நிர்ஹேதுக கிருபையினால், | பட்டருக்கு ஆள்பட்ட பயன் | ஸ்ரீபராசரபட்டரென்னுமாசாரியர்க்கு சிஷ்யனாக அமையப் பெற்றதாகிய பயனும். |
| நான் கூட்டில் வந்த அன்றே | நான் இவ்வுடலோடு வந்து பிறந்த நாள் தொடங்கி | | |

"சிட்டர்க்கு வாய்த்த, பட்டர்க்காட்பட்ட' 'என்கிற பாடங்களுமொக்கும்.

---

**ஈரிருப தாஞ்சோழம் ஈரொன்ப தாம்பாண்டி**
**ஓர்பதின்மூன் றாம்மலைநா டோரிரண்டாம்—சீர்நடுநா**
**டாறோடீ ரெட்டுதொண்டை அவ்வடநா டாறிரண்டு**
**கூறுதிரு நாடொன்றாக் கொள்.**

| | | | |
|---|---|---|---|
| சோழம் ஈர் இருபது ஆம்; | சோழ நாட்டிலுள்ள திருப்பதிகள் நாற்பதாகும்; | தொண்டை ஆறோடு ஈர் எட்டு | தொண்டை நாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டாகும்; |
| பாண்டி ஈர் ஒன்பது ஆம்; | பாண்டி நாட்டிலுள்ள திருப்பதிகள் பதினெட்டாகும்; | அவ் வடநாடு ஆறு இரண்டு; | தூரத்திலுள்ள வட நாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டாகும். |
| மலை நாடு ஓர் பதின் மூன்று ஆம்; | மலையாள நாட்டிலுள்ள திருப்பதிகள் பதின் மூன்றாகும்; | | |
| சீர் நடு நாடு ஓர் இரண்டு ஆம்; | சிறந்த நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டாகும்; | கூறு திருநாடு ஒன்று ஆ கொள் | சிறப்பாகக் கூறப்படுகிற திருநாடு ஒன்றாகும்; ஆக நூற்றெட்டுத் திருப்பதிகள் கொள்க. |

1. திருவரங்கம் பெரிய கோயில்.

**சீர்வந்த வுந்தித் திசைமுகனை யல்லாதென்**
**சோர்வந்த சொல்லில் சுருங்குமோ—ஆர்வம்**
**ஒருவரங்கங் கோயில் உகந்தவரை யாள்வான்**
**திருவரங்கங் கோயிற் சிறப்பு.**

| | | | |
|---|---|---|---|
| ஒருவர் அங்கு அங்கு ஆர்வம் ஒயில் | ஒருவர் அந்தந்த விஷயாந்தரங்களில் ஆசை யொழியப்பெற்றால் | சீர் வந்த உந்தி திசை முகனால் அல்லாது | அவனது சிறந்த நாபீ கமலத்தில் தோன்றிய பிரமனாலல்லது |
| அவரை உகந்து ஆள்வான் திரு அரங்கம் கோயில் சிறப்பு | அங்ஙனம் பற்றற்ற அன்பரை உகந்து ஆட்கொள்பவனாகிய பெருமானது திருவரங்கப்பதியின் சிறப்பானது | என் சோர் வந்த சொல்லில் சுருங்குமோ? | எனது குற்றம் மலிந்த சொல்லால் சுருக்கமாக வேனும் சொல்ல இயலுமோ? |

* * *—'எம்மாண்பினயன் நான்கு நாவினலு மெடுத்தேத்தி யீரிரண்டு முகமுங் கொண்டு எம்மாடு மெழில் கண்களெட்டினேடும் தொழுதேத்தியினிதிறைஞ்ச நின்ற" என்கிற பெருமாள் திருமொழிப் பாசுரத்தைக்கொண்டு முன்னடிகள்பேசப்பட்டன. இந்நூலின் செய்யுட்கள்தோறும் பின்னிரண்டடிகளில் திரிபு என்னுஞ் சொல்லணி அமைக்கப் பெற்றுள்ளது. ஈற்றடியில் 'திருவரங்கங் கோயில்' என்ன வேண்டி மூன்றாமடியில் 'ஒருவரங்கங் கோயில்' என்ற சொல்தொடரை அமைத்தார்; பதம் பிரிப்பது வேறு. இங்ஙனமே செய்யுள்தோறுங் கண்டுகொள்க. ஒருவரங்கங் கோயில், திருவரங்கங்கோயில் என்று யமகமாக இருந்தாலும் முன்னே (ஒருவர் அங்கங்கு ஓயில்) என்றும், பின்னே (திருவரங்கம் கோயில்) என்றும் பிரித்துப் பொருள்கொள்ள வைத்தது கவியின் சாதுரியம். மேலெங்கும் இங்ஙனமே காண்க. (1)

## 2. திருவுறையூர்.

**சிறப்புடைய செல்வத் திருப்பதிகள் போல**
**மறப்புடைய நாயேன் மனத்துள்—உறப்போந்து**
**அறந்தையா நின்ற வரங்கா திருவாழ்**
**உறந்தையாய்! இங்குறைந்த தோது. (2)**

| | | | |
|---|---|---|---|
| மறப்பு உடைய நாயேன் மனத்துள் உற போந்து | எதையும் மறக்கு மியல்வினனான நீசனேனுடைய மனத்தில் நன்கெழுந்தருளியிருந்து | திருவாழ் உறந்தையாய்! | பெரிய பிராட்டியார் வாழ்கின்ற உறையூரிலுள்ளவனே! |
| அறம் தையா நின்ற அரங்கா! | (அம்மனத்தில்) தருமநெறிபதியுமாறு செய்கின்ற அரங்கநாதனே! | சிறப்பு உடைய செல்வம் திருப்பதிகள் போல இங்கு உறைந்தது ஓது | (நீ) சிறந்த திவ்ய தேசங்களிற்போலஎன் மனத்திலும் உறைந்திருப்பதற்குக் காரண முரைத்தருளவேணும். |

* * *—உறையூர்க்கு உறந்தை யென்றும் திருநாமமென்க. உறையூரைப் பற்றின இச்செய்யுளில் அரங்கா! என்று ஸ்ரீரங்கநாதனை விளித்தது—எல்லாத் திருப்பதிகளுக்கும் ஸ்ரீரங்கநாதனே தலைவன் என்கிற தத்துவத்தை யுணர்த்த. இங்ஙனே பல பாசுரங்களிலும் அரங்கனை ப்ரஸ்தாவித்து வருவர். .... .... (2)

## 3. தஞ்சை மாமணிக் கோயில்.

**ஓதக்கேள் நெஞ்சே! உனக்குமிது நன்றெனக்கும்**
**மேதக்க நன்மையினி வேறில்லை—போதப்**
**பெருந்தஞ்சை மாமணியைப் பேணி வடிவம்**
**பொருந்தஞ்சை மாமணியைப் போற்று. (3)**

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே ஓத கேள் | மனமே! நான் சொல்வதொன்று கேள் : | போத பெரு தஞ்சை மாமணியை பேணி | பெருமை பெற்ற தஞ்சையென்னுந்திருப்பதியிலுறையும் மா மணி போன்ற பெருமானை நன்கு விரும்பித்துதித்து |
| இது உனக்கும் நன்று | நான் சொல்லுகிறவிது உனக்கும் நன்மையையுண்டாக்கும், | வடிவம் பொருந்து அஞ்சை மா மணியை போற்று. | அப்பெருமானது திருவடிவத்திற் பொருந்திய பஞ்சாயுத ஆழ்வார்களையும் பிராட்டியையும் கௌஸ்துபமணியையும் வாழ்த்துவாயாக. |
| எனக்கும் மேதக்க நன்மை | எனக்கும் மிக்க நன்மை பயக்குமது இதனில் வேறொன்றில்லையாம். (அது யாதெனில்) | | |

* * *—வடிவம் பொருந்து அஞ்சு - திருவாழி திருச்சங்கு முதலிய பஞ்சாயுதங்களே பகவானது வடிவிற் பொருந்தியிருப்பதறிக. மா - வடசொல்; "இந்திரா லோகமாதா மா" என்ற அமரகோசம் காண்க. மணி - "குருமாமணிப்பூண் குலாவித் திகழுந் திருமார்பு" என்ற பெரியாழ்வார் திருமொழியை நினைப்பது. .... (3)

## 4. அன்பில் திருப்பதி.

போற்றிசெய வோர்குடைக்கீழ்ப் பொன்னாடு மிந்நாடும்
நாற்றிசையு மாண்டாலும் நன்கில்லை—தோற்றமிலா
எந்தையன்பி லாதி யிணைத்தா மரையடிக்கே
சிந்தையன்பி லாதார் சிலர். (4)

| | |
|---|---|
| தோற்றம் இலா எந்தை | பிறப்பிலியான லோக பிதாவும் |
| அன்பில் ஆதி | அன்பிலென்னுந் திருப்பதியி லுறைகின்ற ஆதிபுருஷனுமான பெருமானுடைய |
| இணை தாமரை அடிக்கு | உபய பாதாரவிந்தங்களுக்கு |
| சிந்தை அன்பு இலாதார் சிலர் | மாநஸிகமான பக்தியைச் செலுத்தாத சிலர், |
| பொன் நாடும் நால் திசையும் இ நாடும் | தேவ லோகத்தையும் நான்கு திக்கின் எல்லையிலுள்ள இம் மண்ணுலகத்தையும் |
| போற்றி செய ஓர் குடை கீழ் ஆண்டாலும் | பலர் கொண்டாட ஒற்றைக்குடையின் கீழிருந்து ஆளப்பெற்றாலும் |
| நன்கு இல்லை | (அதனால் அவர்கட்கு) யாதொரு நன்மையுமில்லையாம். |



## 5. கரம்பனூர் - உத்தமர் கோயில்.

சிலமா தவஞ்செய்தும் தீவேள்வி வேட்டும்
பலமா நதியிற் படிந்தும்—உலகில்
பரம்பநூல் கற்றும் பயனில்லை நெஞ்சே
கரம்பனூ ருத்தமன்பேர் கல். (5)

| | |
|---|---|
| நெஞ்சே | எனது மனமே!, |
| உலகில் | இந்நிலத்தில் |
| சில மா தவம் செய்தும் | சில மஹாதபஸ்ஸுக்களைச் செய்தும் |
| தீ வேள்வி வேட்டும் | அக்னி ஹோத்ரங்களைச் செய்தும் |
| பல மா நதியில் படிந்தும் | பல புண்ணிய நதிகளில் குடைந்தாடியும் போருவதனாலும் |
| பரம்ப நூல் கற்றும் | விரிவாக நூல்களைக் கற்பதனாலும் |
| பயன் இல்லை | யாதொரு பலனும் பெறலாகாது; (ஆதலால் இவற்றில் முயற்சியைவிட்டு) |
| கரம்பன் ஊர் உத்தமன் பேர் கல் | திருக் கரம்பன்பதியிலுறையும் உத்தமனுடைய திருநாமங்களையோது. |

* * *—திருமங்கையாழ்வார் "ஊன் வாட வுண்ணாதுயிர் காவலிட்டு உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து தான்வாட வாடத் தவஞ்செய்ய வேண்டா........தில்லைத் திருச் சித்ரகூடஞ் சென்று சேர்மின்களே" என்றும் "காயோடு நீடுகனியுண்டுவீசு கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயூடு நின்று தவஞ்செய்ய வேண்டா....... தில்லைத் திருச் சித்ரகூடஞ் சென்று சேர்மின்களே" என்று மருளிச்செய்தவாற்றைத் தழுவியது இது. இவர் தாமும் திருவரங்கக் கலம்பகத்தில் "காயிலை தின்றுங் கானிலுறைந்துங் கதிரோடிடைத் தீயிடை நின்றும் பூ வலம் வந்தும் திரிவீர்காள், காயிலு

மன்பன் பூமகள் நண்பன் படநாகப் பாயன் முகுந்தன் கோயிலரங்கம் பணிவீரே'' என்றார். தவம் முதலியவற்றைப் பழிப்பதில் நோக்கில்லை; திவ்ய தேச ஸேவை முக்கிய மென்றுரைப்பதில் மட்டுமே நோக்கு. .... .... .... (5)

6. திருவெள்ளறை - ச்வேதாத்திரி.

**கல்லிருந்தான் தந்தை கமலத்தோன் அக்கமலத்**
**தில்லிருந்தான் தந்தையரங் கேசனென்றே—தொல்லைமறை**
**யுள்ளறையா நின்றமையால் உள்ளமே கள்ளமின்றி**
**வெள்ளறையான் தாளே விரும்பு. (6)**

| | | | |
|---|---|---|---|
| உள்ளமே | எனது மனமே ! | தொல்லை மறையுள் அறையா நின்றமையால் | அநாதியான வேதங்களில் ஓதப்பட்டிருத்தலால் |
| கல் இருந்தான் தந்தை கமலத்தோன் | "கைலாஸ வாஸியான சிவனுக்குத் தந்தை பிரமனுவான்; | கள்ளம் இன்றி | கபடமில்லாமல் |
| அக் கமலத்தில் இருந்தான் தந்தை அரங்கேசன் என்று | அப்பிரமனுடைய திருத்தந்தை ஸ்ரீமந்நாராயணனுவான்" என்று | வெள்ளறையான் தாளே விரும்பு | திருவெள்ளறையில் ஸேவைஸாதிக்கு மந்த நாராயணனுடைய திருவடிகளையே விரும்புவாயாக. |

7. புள்ளம்பூதங்குடி.

**விரும்பினவை யெய்தும் வினையனைத்துந் தீரும்**
**அரும்பரம வீடு மடைவீர்—பெரும்பொறிகொள்**
**கள்ளம்பூ தங்குடிகொள் காயமுடை யீர்!அடிகள்**
**புள்ளம்பூ தங்குடியிற் போம். (7)**

| | | | |
|---|---|---|---|
| பெரும் பொறி கொள் | பெரிய யந்திரங்கள் போன்ற பஞ்சேந்திரியங்களைக் கொண்டதும் | அடிகள் புள்ளம் பூதங்குடியில் போம் | நமது ஸ்வாமி வாழ்கின்ற திருப்புள்ளம் பூதங்குடியில் சென்று சேருங்கள்; (அங்ஙனம் சேர்ந்தவளவில்) |
| கள்ளம் பூதம் குடி கொள் | கபடச் செயல்களும் பஞ்ச பூதங்களும் பொருந்தப் பெற்றதுமான | விரும்பினவை எய்தும் | அபேக்ஷிதங்களெல்லாம் கைகூடும்; |
| | | வினை அனைத்தும் தீரும் | எல்லாக் கருமங்களும் தொலையும்; |
| காயம் உடையீர் | உடலைக் கொண்டிருக்கின்ற உலகத்தவர்களே !, (நீங்கள்) | அரும் பரம வீடும் அடைவீர் | அருமையான பரம பதத்தையும் அடையப் பெறுவீர். |

8. திருப்பேர் நகர் - அப்பக்குடத்தான் ஸன்னிதி.

**போமானை யெய்து பொருமானைக் கொம்பொசித்து**
**ஆமானை மேய்த்துவந்த வம்மானைத்—தாமச்**
**செழுந்திருப் பேரானைத் திருமாலைச் சிந்தித்**
**தெழுந்திருப்பேற் குண்டோ விடர். (8)**

| | | | |
|---|---|---|---|
| போம் மானை எய்து | (பஞ்சவடியில்) துள்ளித் துள்ளி யோடின மாரீச மாயமானை அம்பெய்து கொன்றும் | உவந்த அம்மானை | திருவுள்ள முகந்த ஸ்வாமியாயும் |
| | | தாமம் செழும் திருப்பேரானை [செழுந் திருப் பேர்த் தாமத் தானை] | செழுமை தங்கிய திருப்பேர் நகரை இருப்பிடமாகவுடையனாயுமுள்ள பெருமானை |
| பொரும் ஆனை கொம்பு ஒசித்து | (கம்ஸனரண்மனை வாசலில் போர் செய்யவந்த குவலயாபீட மதயானையின் கொம்புகளை முறித்து அதனை முடித்தும் | சிறு காலை சிந்தித்து எழுந் திருப்பேற்கு | சிற்றஞ் சிறுகாலையில் சிந்தித்துக் கொண்டே எழுந்திருக்குமெனக்கு |
| ஆம் ஆனை மேய்த்து | இட்டமான பசுக்களை மேய்த்தும் | இடர் உண்டோ | எவ்விதமான துக்கமுமில்லையன்றோ. |

* * *—இரண்டாமடியில் ஆனை - ஆன்ஐ ; ஆன் - பசுக்கள். இரண்டாமடியின் தனிச் சீரில் தாமமென்றது - வாஸஸ்தலமென்னும் பொருளதான வடசொல் ; இதில் 'தா' என்னும் எழுத்து தவர்க்க சதுர்த்தம். இனி தவர்க்க த்ருதீய மென்றுங் கொள்ளலாம் ; அப்போது, தாமம் - மாலைகளினால், செழு - அழகு வாய்ந்த, பேரானை - திருப்பேர்நகரிலுறையும் பெருமானை என்று பொருள் கொள்வது. ... (8)

### 9. ஆதனூர். [காமதேனுபுரம்]

**இடரான வாக்கை யிருக்க முயலார்**
**மடவார் மயக்கின் மயங்கார்—கடவுளர்க்கு**
**நாதனூ ராதரியார் நானெனதென் னாரமலன்**
**ஆதனூ ரெந்தை யடியார். (9)**

| | | | |
|---|---|---|---|
| அமலன் | அகில ஹேய ப்ரத்யநீகனான | மடவார் மயக்கில் மயங்கார் | பெண்களின் மோஹவலையில் சிக்கமாட்டார் ; |
| ஆதனூர் எந்தை | ஆதனூரி லெழுந்தருளியிருக்கு மெம்பிரானுக்கு | கடவுளர்க்கு நாதன் ஊர் ஆதரியார் | தேவர்களுக்கு நாதனான இந்திரனுடைய லோகத்தையும் ஒரு பொருளாக மதியார் ; |
| அடியார் | அடிமைப்பட்டவர்கள் | | |
| இடர் ஆன ஆக்கை இருக்க முயலார் | பலவகைத் துன்பங்கட் கிடமாகிய அழுக்குடம்பு நிலைத்திருக்க வேணுமென்று முயற்சி செய்யார் ; | நான் எனது என்னார் | அஹங்கார மமகாரச் சொற்களையும் சொல்லார். |

### 10. திருவழுந்தூர். [தேரழுந்தூர்]

**அடியாராய் வாழ்மின் அறிவிலாப் பேய்காள் !**
**செடியார் வினையனைத்துந் தீரும்—முடிவில்**
**செழுந்தூரத் தன்னெனிலும் செங்கண்மா லெங்கள்**
**அழுந்தூரத் தன்னணிய னாம். (10)**

| | | | |
|---|---|---|---|
| அறிவு இலா பேய்காள் | அறிவு கெட்ட பேய்களே ! (நீங்கள்) | செடி ஆர் வினை அனைத்தும் தீரும் | புதர் போலடர்ந்துள்ள உங்கள் பாவங்களெல்லாம் தொலையும்; |
| அடியார் ஆய் வாழ்மின் | பாகவதர்களாய் உஜ்ஜீவித்துப் போங்கள் ; (அதனால்) | செம் கண் மால் | செந்தாமரைக் கண்ணனாய் |

| | | | |
|---|---|---|---|
| போம் மானை எய்து | (பஞ்சவடியில்) துள்ளித் துள்ளி யோடின மாரீச மாயமானை அம்பெய்து கொன்றும் | உவந்த அம் மானை | திருவுள்ள முகந்த ஸ்வாமியாயும் |
| | | தாமம் செழும் திருப்பேரானை [செழுந் திருப்பேர்த்தாமத்தானை] | செழுமை தங்கிய திருப்பேர் நகரை இருப்பிடமாகவுடையனுயுமுள்ள பெருமானை |
| பொரும் ஆனை கொம்பு ஒசித்து | (கம்ஸனரண்மனை வாசலில், போர் செய்யவந்த குவலயாபீட மதயானையின் கொம்புகளை முறித்து அதனை முடித்தும் | சிறு காலை சிந்தித்து எழுந் திருப்பேற்கு | சிற்றஞ் சிறுகாலையில் சிந்தித்துக் கொண்டே எழுந்திருக்குமெனக்கு |
| ஆம் ஆனை மேய்த்து | இட்டமான பசுக்களை மேய்த்தும் | இடர் உண்டோ | எவ்விதமான துக்கமுமில்லையன்றே. |

* * *—இரண்டாமடியில் ஆனை - ஆன்ஐ ; ஆன் - பசுக்கள். இரண்டாமடியின் தனிச் சீரில் தாமமென்றது - வாஸஸ்தலமென்னும் பொருளதான வடசொல் ; இதில் 'தா' என்னும் எழுத்து தவர்க்க சதுர்த்தம். இனி தவர்க்க த்ருதீய மென்றுங் கொள்ளலாம் ; அப்போது, தாமம் - மாலைகளினால், செழு - அழகு வாய்ந்த, பேரானை - திருப்பேர்நகரிலுறையும் பெருமானை என்று பொருள் கொள்வது. ... (8)

### 9. ஆதனூர். [காமதேனுபுரம்]

**இடரான வாக்கை யிருக்க முயலார்**
**மடவார் மயக்கின் மயங்கார்—கடவுளர்க்கு**
**நாதனூ ராதரியார் நானெனதென் னுரமலன்**
**ஆதனூ ரெந்தை யடியார். (9)**

| | | | |
|---|---|---|---|
| அமலன் | அகில ஹேய ப்ரத்யநீகனான | மடவார் மயக்கில் மயங்கார் | பெண்களின் மோஹவலையில் சிக்கமாட்டார் ; |
| ஆதனூர் எந்தை | ஆதனூரி லெழுந்தருளியிருக்கு மெம்பிரானுக்கு | கடவுளர்க்கு நாதன் ஊர் ஆதரியார் | தேவர்களுக்கு நாதனான இந்திரனுடைய லோகத்தையும் ஒரு பொருளாக மதியார் ; |
| அடியார் | அடிமைப்பட்டவர்கள் | | |
| இடர் ஆன ஆக்கை இருக்க முயலார் | பலவகைத் துன்பங்கட்கிடமாகிய அழுக்குடம்பு நிலைத்திருக்க வேணுமென்று முயற்சி செய்யார் ; | நான் எனது என்னார் | அஹங்கார மமகாரச் சொற்களையும் சொல்லார். |

### 10. திருவழுந்தூர். [தேரழுந்தூர்]

**அடியாராய் வாழ்மின் அறிவிலாப் பேய்காள் !**
**செடியார் வினையனைத்துந் தீரும்—முடிவில்**
**செழுந்தூரத் தன்னெனிலும் செங்கண்மா லெங்கள்**
**அழுந்தூரத் தன்னணிய னும். (10)**

| | | | |
|---|---|---|---|
| அறிவு இலா பேய்காள் | அறிவு கெட்ட பேய்களே ! (நீங்கள்) | செடி ஆர் வினை அனைத்தும் தீரும் | புதர் போலடர்ந்துள்ள உங்கள் பாவங்களெல்லாம் தொலையும்; |
| அடியார் ஆய் வாழ்மின் | பாகவதர்களாய் உஜ்ஜீவித்துப் போங்கள் ; (அதனால்) | செம் கண் மால் | செந்தாமரைக் கண்ணனாய் |

| | | | |
|---|---|---|---|
| அழுந்தூர் எங்கள் அத்தன் | திருவழுந்தூரிலுறைபவனான எங்கள் பெருமான் | செழும் தூரத்தன் எனிலும் | நமக்கு மிகவும் எட்டாதவனெனினும் |
| | | முடிவில் அணியன் ஆம் | அந்திம காலத்தில்ஸமீபத்தில் வந்து நிற்பன். |

### 11. சிறுபுலியூர்.

ஆமருவி மேய்த்த அரங்கரெதிர் ஆர்நிற்பார்
தாமருவி வாணனைத்தோள் சாய்த்தநாள்—சேம
முறுபுலியூர் வன்தோ லுடையா னுடைந்தான்
சிறுபுலியூ ரெந்தைமேற் சென்று. (11)

| | | | |
|---|---|---|---|
| தாம் வாணனை மருவி | கண்ணபிரானை தான் பாணாசுரனைக் கிட்டி | சிறுபுலியூர் எந்தை மேல் சென்று | சிறுபுலியூரில் உறையும் பெருமானை அந்த நாராயணனை எதிர்த்துச் சென்று |
| தோள் சாய்த்த நாள் | அவனது ஆயிரந் தோள்களையு மறுத்துத் தள்ளினபோது | | |
| சேமம் உறு | அந்த பாணாசுரனுக்கு க்ஷேமஞ்செய்யவொருப்பட்டிருந்தவனும் | உடைந்தான் | பங்க மடைந்தான்; (ஆதலால்) |
| புலி ஊர் வல் தோல் உடையான் | புலியானது மேற்கொண்டிருந்த வலிய தோலை [வலிய புலித்தோலை] ஆடையாகவுடையனுமான சிவன் | ஆமருவி மேய்த்த அரங்கர் எதிர் ஆர் நிற்பார் | பசுக்களை விரும்பி மேய்த்த அந்த நாராயணனையெதிரிட்டு யாரால் நிற்கமுடியும். |

### 12. திருச்சேறை—ஸார க்ஷேத்திரம்.

சென்றுசென்று செல்வச் செருக்குறுவார் வாயில்தொறும்
நின்றுநின்று தூங்கும் மடநெஞ்சே—இன்தமிழைக்
கூறைக்குஞ் சோற்றுக்குங் கூறாதே பேறாகச்
சேறைக்கு நாயகன்பேர் செப்பு. (12)

| | | | |
|---|---|---|---|
| செல்வம் செருக்கு உறுவார் வாயில் தொறும் | செல்வச் செருக்குக் கொண்டவர்களின் வீட்டு வாசல்தோறும் | இன் தமிழை கூறைக்கும் சோற்றுக்கும் கூறாதே | இனியதமிழ்க்கவிதையை கூறை சோறுகளுக்காகப் பாடாமல் |
| சென்றுசென்று | பலகால் சென்று | பேறு ஆக | பரம புருஷார்த்தம் பெறுமாறு |
| நின்றுநின்று | நெடுநாள் நின்று | | |
| தூங்கும் மட நெஞ்சே | (ஒரு காசும் பெறாமையினால்சோர்வடைகின்ற நெஞ்சே! | சேறைக்கு நாயகன் பேர்செப்பு | திருச்சேறைக்குத் தலைவனான ஸாரநாதனுடைய திருநாமங்களைச் சொல்லிப்பாடு. |

* * *—முதலடியில் "செல்வம் செருக்குவார்" என்றும் பாட முண்டு.

### 13. தலைச்சங்க நாண்மதியம்

செப்புங்கால் ஆதவனும் திங்களும்வா னுந்தரையும்
அப்புங்கா லுங்கனலு மாய்நின்றான்—கைப்பால்
அலைச்சங்க மேந்து மணியரங்கத் தம்மான்
தலைச்சங்க நாண்மதியத் தான். (13)

| | | | |
|---|---|---|---|
| கைப் பால் | திருக்கைத்தலத்தில் | ஆதவனும் திங்களும் | ஸூர்ய சந்திரர்களாயும் |
| அலை சங்கம் ஏந்தும் | அலைகடலில் தோன்றிய சங்கத்தை யேந்தியுள்ள | வானும் தரையும் | ஆகாயமாயும் பூமியாயும் |
| அணி அரங்கத்து அம்மான் | ஸ்ரீ ரங்க நாதஸ்வாமியாய் | | |
| தலைச் சங்க நாண் மதியத்தான் | தலைச் சங்க நாண்மதிய மென்னுந் தலத்திலுறையும் பெருமான் | அப்பும் காலும் கனலும் ஆய் | நீரும் காற்றும் நெருப்புமாயு மிருந்து |
| செப்புங்கால் | உண்மையுரைக்குமிடத்து | நின்றான் | ஸர்வாந்தர்யாமியாக நிற்பவன். |

* * *—"*நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய், சீரார் சுடர்களிரண்டாய்*" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தை அடியொற்றியது இச் செய்யுள். .... 13

### 14. திருக்குடந்தை—கும்பகோணம்.

**தானே படைத்துலகைத் தானே யளித்துநீ**
**தானே யழிக்குந் தளர்ச்சியோ—வானில்**
**திருமகுடந் தைக்கச் சிறுகுறளாய் நீண்ட**
**பெருமகுடந் தைக்கிடந்தாய் பேசு.** (14)

| | | | |
|---|---|---|---|
| சிறு குறள் ஆய் | வாமனாவதாரமெடுத்து (பின்பு) | தானே அளித்து | நீயே பாதுகாத்து |
| வானில் திரு மகுடம் தைக்க | ஆகாயத்தில் அழகிய முடி முட்டும்படி | தானே அழிக்கும் தளர்ச்சியோ | நீயே யழிப்பதனாலாகிய இளைப்பினாலோ |
| நீண்ட பெரும | ஓங்கி வளர்ந்த பெருமானே! | குடந்தை கிடந்தாய் | திருக்குடந்தையிலே (நீண்ட காலமாகச்) சயனித்திரா நின்றாய்? |
| உலகை | ஸகல சராசரங்களையும் | | |
| நீ தானே படைத்து | நீயே ஸ்ருஷ்டித்து | பேசு | உண்மைக் காரணத்தை உரைத்தருள வேணும். |

* * *—"*நடந்த கால்கள் நொந்தவோ நடுங்க ஞால மேனமாய் இடந்த மெய் குலுங்கவோ விலங்குமால் வரைச்சுரம் கடந்தகால் பரந்த காவிரிக் கரைக் குடந்தையுள் கிடந்தவாறு—பேசு*" என்ற திருச்சந்தவிருத்தப் பாசுரத்தின் சாயல் இங்குக் காணத்தக்கது. .... .... .... .... .... 14

### 15. திருக்கண்டியூர்.

**பேசவரின் தென்னரங்கன் பேரெல்லாம் பேசுகவாய்**
**கேசவனைக் காண்கவிழி கேட்கசெவி—ஈசனார்**
**உண்டியூர் தோறு முழன்றிரவா மல்தவிர்த்தான்**
**கண்டியூர் கூப்புகவென் கை.** (15)

| | | | |
|---|---|---|---|
| வாய் பேச வரின் | எனது வாயானது ஏதேனும் பேசத் தொடங்கினால் | செவி (கேசவனை) கேட்க | எனது காதுகள் அப்பெருமானைப் பற்றியே கேட்கக் கடவன; |
| | | என் கை | எனது கைகள் |
| தென் அரங்கன் பேர் எல்லாம் பேசுக | திருவரங்கனது திருநாமங்களை யெல்லாம் பேசக்கடவது; | ஈசனார் ஊர்தோறும் உழன்று உண்டி இரவாமல் தவிர்த்தான் கண்டியூர் கூப்புக | சிவபிரான் ஊர்தோறும் அலைந்து சென்று பிக்ஷை யெடுக்காதபடி அவனது சாபத்தைப் போக்கியருளின அப்பெருமானுடைய திருக்கண்டியூரை நோக்கி அஞ்சலி செய்யக் கடவன. |
| விழி கேசவனை காண்க | எனது கண்கள் எம்பெருமானையே காணக் கடவன; | | |

* * *—திருக்குறுந்தாண்டகத்தில் "பிண்டியார் மண்டை யேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணு முண்டியான் சாபந்தீர்த்த வொருவனூர் உலகமேத்துங் கண்டியூர்" என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்த பாசுரம் இங்கு அநுஸந்திக்கத் தக்கது. இத்தலத்து எம்பெருமான் திருநாமம் 'அரன் சாபந்தீர்த்த பெருமாள்' என்பது. 15

16. திருவிண்ணகர்—ஒப்பிலியப்பன்கோவில்.

கையு முரையுங் கருத்துமுனக் கேயடிமை
செய்யும் படிநீ திருத்தினாய்—ஐயா
திருவிண் ணகராளா சிந்தையிலு மெண்ணேன்
பெருவிண் ணகராளும் பேறு. (16)

| | | | |
|---|---|---|---|
| ஐயா திருவிண் ணகர் ஆளா | திருவிண்ணகரையாளும் ஐயனே! | நீ திருத்தினாய் | நீ பரிஷ்கரித்தருளினை; (ஆதலால் இனி நான்) |
| கையும் உரையும் கருத்தும் | கைகளும் வாக்கும் எண்ணமுமாகிய முக்கரணங்களையும் | பெரு விண் நகர் ஆளும் பேறு | தேவலோகத்தை யாளும் பேற்றினையும் |
| உனக்கே அடிமை செய்யும் படி | உனக்கே ஆட்படும்படியாக | சிந்தையிலும் எண்ணேன் | நெஞ்சாலும் நினையேன். |

17. திருக்கண்ணபுரம்.

பேறு தரினும் பிறப்பிறப்பு நோய்மூப்பு
வேறு தரினும் விடேன்கண்டாய்—ஏறுநீர்
வண்ணபுரத் தாயென் மனம்புகுந்தாய் வைகுந்தா
கண்ணபுரத் தாயுன் கழல். (17)

| | | | |
|---|---|---|---|
| ஏறு நீர் வண்ணம் புரத்தாய் | மேன்மேலு மேறுகின்ற நீரையுடைய கடலின் நிறம் போன்ற நிறமுடைய திருமேனியையுடையவனே! | பேறு தரினும் | (நீ அடியேனுக்கு) பரம புருஷார்த்தமான முக்தியைக் கொடுத்தாலும் |
| என் மனம் புகுந்தாய் | எனது நெஞ்சிற் குடி கொண்டிருப்பவனே! | வேறு பிறப்பு இறப்பு நோய் மூப்பு தரினும் | அதற்கு மாறாக ஜனன மரண வ்யாதி ஜராமயமான ஸம்ஸ்ருதியையே கொடுத்தாலும் |
| வைகுந்தா | ஸ்ரீவைகுந்தபதியே! | | |
| கண்ண புரத்தாய் | திருக்கண்ணபுரத் தெம்பெருமானே! | உன் கழல் விடேன் | உனது திருவடிகளை விட்டு நீங்கமாட்டேன். |

* * *—"திவி வா புவி வா மமாஸ்து வாஸோ நரகே வா நரகாந்தக! ப்ரகாமம், அவதீரித சாரதா ரவிந்தௌ சரணௌ தே மரணேபி சிந்தயாமி." என்ற முகுந்த மாலைக்கு ஒப்பானது இச்செய்யுள். ஏறுநீர்வண்ண புரத்தாய்=கடல் வண்ணனே! என்றபடி; புரம் - பட்டினம்; ஆன்மாவுக்கு இருப்பிடமான உடல் என்க. .... (17)

18. திருவாலி திருநகரி.

கழன்றுபோம் வாயுவினைக் கட்டாமல் தீர்த்தம்
உழன்றுபோ யாடாம லுய்ந்தேன்—அழன்று
பொருவாலி காலன் பரகாலன் போற்றுந்
திருவாலி மாயனையே சேர்ந்து. (18)

| | | | |
|---|---|---|---|
| அழன்று பொரு வாலி காலன் | கோபித்து (ஸுக்ரீவனோடு) போர் செய்த வாலிக்கு மிருத்யுவானவனும் | சேர்ந்து | சரணம் புகுந்ததனால், |
| | | கழன்று போம் வாயு வினை கட்டாமல் | பிராணாயாமம் முதலியன செய்யாமலும் |
| பரகாலன் போற்றும் திரு ஆலி மாயனை | திருமங்கையாழ்வார் பாடித் துதித்த திருவாலி திரு நகரியில் நிற்பவனுமான பெருமானை | உழன்று போய் தீர்த்தம் ஆடாமல் | வருந்திப் பலவிடங்களிலுஞ் சென்று புண்ய தீர்த்தங்களில் அவகாஹியாமலும் |
| | | உய்ந்தேன் | உஜ்ஜீவிக்கப் பெற்றேன். |

## 19. திருநாகை—நாகைப்பட்டினம்.

சேர்ந்துனக்குக் குற்றேவல் செய்திலனென் சிந்தையில்நீ
ஆர்ந்ததற்கோர் கைம்மா றறிகிலேன்—பூந்துவரை
மன்னு,கை யாழி வலவா வலம்புரியாய்
தென்னாகை யாயருளிச் செய். (19)

| | | | |
|---|---|---|---|
| பூ துவரை மன்னு | அழகிய த்வாரகாபுரிக்கு அதிபதியே! | சேர்ந்து உனக்கு குற்றேவல் செய்திலன் | உன்னைச் சரணமடைந்து சிறியதொரு கைங்கரியமும் செய்திலேன்; |
| கை ஆழி வலவா [வலம் கை ஆழியாய்] | வலத்திருக்கையில் திருவாழியைக் கொண்டவனே! | | (அப்படியிருந்தும்) |
| | | என் சிந்தையில் நீ ஆர்ந்ததற்கு | அடியேனது மனத்தில் நீ பொருந்தி யெழுந்தருளி யிருப்பதற்கு |
| வலம்புரியாய் | வலம் புரிச்சங்க முடையவனே! | ஓர் கைம்மாறு அறிகிலேன் | ஒரு பிரதி யுபகார மறிகின்றிலேன்; |
| தென் நாகையாய் | அழகிய திருநாகைத் திருப்பதியிலுறைபவனே! | அருளிச் செய் | ஏதேனுமிருந்தால் அதனை இன்னதென்று கூறியருளாய். |

* * *—நம்மாழ்வார் திருவாய்மொழியில் வானமாமலை யெம்பெருமானை நோக்கி "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய் உனக்கோர் கைம்மாறு நானொன்றிலேன்" என்றருளிச் செய்ததை அடியொற்றியது இது. .... (19)

## 20. திருநறையூர்—நாச்சியார்கோயில்.

செய்ய சடையோன் திசைமுகத்தோன் வானவர்கோன்
ஐயமறுத் தின்ன மறியாரே—துய்ய
மருநறையூர் வண்டுழாய் மாயோன்செவ் வாயோன்
திருநறையூர் நின்றான் செயல். (20)

| | | | |
|---|---|---|---|
| துய்ய மருநறை ஊர் வண் துழாய் | பரிசுத்தமான நறு மணமும் தேனும் பொருந்திய செழிப்பான திருத்துழாயை யணிந்தவனும் | செயல் | செய்கையைப்பற்றி |
| செம் வாயோன் | சிவந்த திருவதரத்தை யுடையவனும் | செய்ய சடையோன் திசைமுகத்தோன் வானவர்கோன் | சிவனும் பிரமனும் இந்திரனும் |
| திரு நறையூர் நின்றான் | திருநறையூரில் நிற்பவனுமான | ஐயம் அறுத்து இன்னம் அறியார் ஏ | நிஸ்ஸந்தேஹமாக இன்னமும் தெரிந்துகொண்டாரில்லையே! |
| மாயோன் | எம்பெருமானுடைய | | |

### 21. நந்திபுர விண்ணகரம். (நாதன் கோயில்.)

செயற்கரிய செய்வோமைச் செய்யாமல் நெஞ்சே
மயக்குவார் ஐவர் வலியால்—நயக்கலவி
சிந்திபுர விண்ணகர மென்பர்திருச் செங்கண்மால்
நந்திபுர விண்ணகர நாடு. (21)

| | | | |
|---|---|---|---|
| செயற்கு அரிய செய்வோமை | செய்ய முடியாதசெய்கைகளையும் செய்ய வல்ல நம்மை | நயம் கலவி சிந்தி | 'நீ சிற்றின்பக் கலவியையே சிந்திப்பாயாக' என்றும் |
| செய்யாமல் | செய்யவொட்டாமல் | விண் நகரம் புர என்பர் | 'ஸ்வர்க்க லோகத்தை யரசாட்சி செய்வாயாக என்றும் ஏவுவர்கள்; (நீ அந்தத் துர்ப்போதனைக்கு உடன்படாமல்) |
| வலியால் மயக்குவார் | (தமது) வலிமையால் மயங்கச் செய்பவர்களாகிய | திரு செம் கண் மால் | செந்தாமரைக் கண்ணனை திருமாலினது |
| ஐவர் | பஞ்சேந்திரியங்களென்னும ஐந்து பிரபுக்கள் | நந்திபுர விண்ணகரம் நாடு | நந்திபுர விண்ணகரமென்னும் திருப்பதியைச் சேவிக்கச் செல்லு. |
| நெஞ்சே | ஓமனமே!, (உன்னை நோக்கி) | | |

* * * முதலடியில் "செயற்கரிய" என்னும் பாடத்தினும் "செயற்குரிய" என்னும் பாடம் சிறக்குமென்று எம்மாசிரியர் அருளிச்செய்யக் கேட்டிருந்த துண்டு; ஸ்வரூபாநுரூபமாகச் செய்ய நினைக்கும் நம்மை அங்ஙனம் செய்யவொட்டாமல் தடுப்பவை பஞ்சேந்திரியங்களென்று தெரிவிக்கிறபடி. இரண்டாமடியில் 'மயக்கு' என்று குகரமிருப்பதால் அதற்கும் சேர்ந்திருக்கும் 'செயற்கு....' என்பது. 'நயக்கலவி சிந்தி' என்றும் 'விண்ணகரம் புர' என்றும் பஞ்சேந்திரியங்கள் துர்ப்போதனை செய்வதாக வைத்துப் பேசிய பேச்சின் கருத்து—இந்திரியங்களுக்கு வசப்படுவதனால் இத்தகைய கெட்ட எண்ணங்களுண்டாகு மென்பதேயாம். நந்தி புரவிண்ணகரமென்ற தலத்திற்கு ப்ராஸமாக 'சிந்தி, புர, விண்ணகரம்' என்றிட்டனர். .... (21)

### 22. திருவிந்தளூர்.

நாடுதும்வா நெஞ்சமே நாராய ணன்பதிகள்
கூடுதும்வா மெய்யடியார் கூட்டங்கள்—சூடுதும்வா
வீதியிந்த ளத்தகிலின் வீசுபுகை வாழமெழும்
ஆதியிந்த ளூரா னடி. (22)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | எனது மனமே!, | வீசு புகை வாசம் வீதி எழும் | வீசுகின்ற புகையின் பரிமளம் வீதிதோறும் உலாவப்பெற்ற |
| நாராயணன் பதிகள் | திருமாலின் திருப்பதிகளை | | |
| நாடுதும் வா | சென்றுசேவிப்போம்வா; | ஆதி இந்தளூரான் அடி | திருவிந்தளூர்த் தலைவனது திருவடிகளை |
| மெய் அடியார் கூட்டங்கள் கூடுதும் வா | உண்மையான பாகவதர்களின் கோஷ்டிகளில் சேருவோம் வா; | | |
| இந்தளத்து அகிலின் | தூபக்கால்களில்போடப்பட்ட அகிற் கட்டையிலிருந்து | சூடுதும் வா | சிரமேற் கொள்ளுவோம் வா. |

### 23. தில்லைத் திருச்சித்திரகூடம்.

அடியா லுலகெல்லா மன்றளந்து கொண்ட
நெடியானைக் கூடுதியேல் நெஞ்சே—கொடிதாய
குத்திர கூடங்கி கொளுந்தாமுன் கோவிந்தன்
சித்திரகூ டங்கருதிச் செல். (23)

| | | | |
|---|---|---|---|
| அடியால் உலகு எல்லாம் அன்று அளந்து கொண்ட | தனது திருவடிகளினால் உலகங்களை யெல்லாம் முன்பு அளந்து கொண்ட | கூடு | இவ்வுடலை |
| நெடியானை | ஸர்வேச்வரனை | அங்கி கொளுந்தாமுன் | நெருப்பு எரித்து விடுவதற்கு முன்னே |
| நெஞ்சே கூடுதி ஏல் | மனமே!, நீ சேர விரும்புவாயாயின் | கோவிந்தன் சித்திர கூடம் | கோவிந்தராஜன் எழுந்தருளியுள்ள தில்லைத் திருச்சித்திர கூடத்தை |
| கொடிது ஆய | கொடுமையுள்ளதும் | கருதி செல் | சிந்தனை செய்து கொண்டே செல்வாயாக, |
| குத்திரம் | க்ஷுத்ரமுமான | | |

*** குத்திரம் கூடு—குத்திரகூடு; க்ஷுத்ரமென்னும் வட சொல் குத்திரமெனத் திரிந்தது. ஆன்மாவுக்கு உறைவிடமாயிருத்தலால் இவ்வுடலம் கூடு என்னப்பட்டது. க்ஷுத்ரமான இவ்வுடலம் மரண மடைவதற்கு முன்னே சித்ரகூடம் செல்லப் பார் என்றதாயிற்று. அக்நி என்னும் வடசொல் அங்கி யெனத் திரிந்தது. .... (23)

### 24. காழிச்சீராம விண்ணகரம்

செல்லுந் தொறுமுயிர்ப்பின் செல்லு மிருவினையை
வெல்லு முபாயம் விரும்புவீர்—தொல்லரங்கர்
சீராம விண்ணகரம் சேர்மின்பின் மீளாத
ஊராம விண்ணகர முண்டு. (24)

| | | | |
|---|---|---|---|
| செல்லும் தொறும் | உடலைவிட்டு உயிர் போமிடமெங்கும் | விரும்புவீர் | தேடுகின்ற மக்களே! (நீங்கள்) |
| உயிர் பின் செல்லும் | அவ்வுயிரின் பின்னே விடாது தொடர்ந்து செல்லுகின்ற | தொல் அரங்கர் சீராம விண்ணகரம் சேர்மின் | அநாதி நாராயணன் வர்த்திக்கிற காழிச் சீராம விண்ணகரத்தைச்சென்றுசேருங்கள் |
| இரு வினையை | புண்ய பாபங்களாகிற கருமங்களை | பின் | அங்ஙனம்சேர்ந்தக்கால் |
| வெல்லும் உபாயம் | கடப்பதற்கு உரிய வழியை | மீளாத ஊர் ஆம் அவின்ணகரம் உண்டு | திரும்பி வருதலில்லாத வூராகிய அத்திருநாடு (உங்களுக்கு) வாய்க்கும். |

ஈற்றடியில் "அவ்விண்ணகரம்" என்பது 'அவிண்ணகரம்' என்று தொக்கி நின்றது செய்யுளின்பம் பற்றி. .... .... .... .... (24)

### 25. திருக்கூடலூர் (ஆடுதுறைப் பெருமாள் கோயில்)

உண்டுகேட் டுற்றுமோந் துப்பார்க்கு மைவர்க்கே
தொண்டுபட லாமோவுன் தொண்டனேன்—விண்டிலங்கும்
ஆடலூர் நேமிமுத லைம்படையா யன்புடையாய்
கூடலூ ராயிதனைக் கூறு. (25)

| | | | |
|---|---|---|---|
| விண்டு இலங்கும் | விட்டு விட்டுப் பிரகாசிக்கின்ற | உன் தொண்டனேன் | உனக்கே அடியவனான நாயினேன் |
| ஆடல் ஊர் | வெற்றி பொருந்திய | உண்டு கேட்டு உற்று மோந்து பார்க்கும் ஐவர்க்கே | உண்ணுதல் கேட்குதல் ஸ்பரிசித்தல் மோருதல் காணுதல் ஆகிய காரியங்களைச் செய்யும் பஞ்சேந்திரியங்கட்கே |
| நேமி முதல் ஐம் படையாய் | சக்கரம் முதலான பஞ்சாயுதங்களையுடையவனே! | | |
| அன்பு உடையாய் | பக்தவத்ஸலனே ! | தொண்டு படல் ஆம் ஓ | அடிமைப் பட்டிருத்தல் தகுதியோ! |
| கூடலூராய் | திருக்கூட லென்னும் திருப்பதியிலுறைபவனே! | இதனை கூறு | இதற்கு மறுமாற்றமுரையாய். |

முதலடியில் 'மோந்து பார்க்கும்' என இயல்பாக வேண்டுமிடத்து "மோந்துப் பார்க்கும்" என வலிமிக்கது வெண்டளை பிறழாமைக்காக. .... .... (25)



## 26. திருக்கண்ணங்குடி.

கூறுபுகழ்த் தன்னடிக்கே கூட்டுவனோ இன்னமென்னை
வேறுபடப் பல்பிறப்பில் வீழ்த்துவனோ ?—தேறுகிலேன்
எண்ணங் குடியா யிருந்தானின் றான்கிடந்தான்
கண்ணங் குடியான் கருத்து. (26)

| | | | |
|---|---|---|---|
| எண்ணம் குடி ஆய் | எனது மனத்தைத் தான் வாழுமிடமாகக்கொண்டு | கூறு புகழ் தன் அடிக்கே கூட்டுவனோ | எங்கும் கூறப்படுகின்ற கீர்த்தியையுடைய தனது திருவடிகளிலேயே சேர்த்துக் கொள்ளுவனோ? |
| இருந்தான் நின்றான் கிடந்தான் | (அம்மனத்திலேயே) இருத்தல் நிற்றல் கிடத்தலாகிய செய்கைகளைச் செய்பவனும் | வேறுபட பல் பிறப்பில் இன்னம் வீழ்த்துவனோ | அதற்குமாறாக ஸம்ஸாரத்திலேயே இன்னமும் தள்ளிவிடுவனோ? |
| கண்ணங் குடியான் | திருக்கண்ணங்குடியில் வாழ்பவனுமான எம் பெருமான் | கருத்து தேறகிலேன் | அவன் திருவுள்ளம் அறிகிலேன். |
| என்னை | அ ... யனை | | |

*** "அற்புதனனந்த சயனன் ஆதிபூதன் மாதவன் நிற்பது மிருப்ப துங்கிடப் பது மென்னெஞ்சுளே" "நின்றது மிருந்த துங்கிடந்தது மென்னெஞ்சுளே" என்ற திருமழிசைப் பிரான் பாடல்களை யடியொற்றியது மூன்றாமடி. "பின் பிறக்க வைத்தனன் கொல் அன்றி நின்று தன் கழற்கு, அன்புறைக்க வைத்தநாள் அறிந்தனன் கொல் ஆழியான்...என் திறத்தி லென்கொல் எம்பிரான் குறிப்பில் வைத்ததே." என்ற அவ்வாழ்வார் பாசுரத்தையே நினைப்பூட்டுவன முன்னிரண்டடிகள். .... (26)



## 27. திருக்கண்ணமங்கை.

கருத்தினால் வாக்கினால் நான்மறையுங் காணா
வொருத்தனை நீ நெஞ்சே யுணரின்—பெருத்தமுகில்
வண்ணமங்கை கண்கால் வனசம் திருவாங்கம்
கண்ணமங்கை யூரென்று காண். (27)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே !, | பெருத்த முகில் | பெரிய காளமேகத்தையொத்ததாம் ; |
| நால் மறையும் | நான்கு வேதங்களும் | அம் கை கண் கால் | அழகிய திருக்கைகளும் திருக்கண்களும் திருவடிகளும் |
| கருத்தினுல்வாக்கினுல் | மனத்தினுலும் வாக்கினுலும் | வனசம் | செந்தாமரைமலர்களாம்; |
| காணு ஒருத்தனை | கண்டறிய முடியாத வொரு நாராயணமூர்த்தியை | ஊர் | இருப்பிடமோவென்றுல் |
| நீ உணரின் | நீ அறியவிரும்பினுல் (அவனுக்கு) | திரு அரங்கம் கண்ணமங்கை | கோயிலும் திருக்கண்ணமங்கையுமாம. |
| வண்ணம் | திருமேனி நிறம் | என்று காண் | என்று அறிவாயாக. |

*** முகில்போன்ற வடிவத்தையும் தாமரை போன்ற திவ்யாவயவங்களையுமுடைய பெருமான் திருவரங்கத்திற்போலவே திருக்கண்ணமங்கையிலும் உறைகின்றுனென்று தமது திருவுள்ளத்திற்கு உணர்த்தினுராயிற்று. .... .... (27)

## 28. திருக் கபிஸ்தலம்

காணியு மில்லமும் கைப்பொருளு மீன்றோரும்
பேணிய வாழ்க்கையும் பேருறவும்—சேணில்
புவித்தலத்தி லின்பமும் பொங்கரவ மேறிக்
கவித்தலத்திற் கண்டுயில்வோன் கால்.

| | | | |
|---|---|---|---|
| காணியும் இல்லமும் கைபொருளும் ஈன்ரோரும் பேணிய வாழ்க்கையும் பேர் உறவும் | பூமியும் வீடும் திரவியமும் பெற்றதாய் தந்தையரும்விரும்பும் நல் வாழ்வும் நெருங்கிய சுற்றத்தாரும் | கவித்தலத்தில் | கபிஸ்தலமென்னும் தலத்தில் |
| | | பொங்கு அரவம் ஏறி | ஆனந்தம் பொங்குகின்ற ஆதிசேஷன் மீதேறி |
| சேணில் புவித்தலத்தில் இன்பமும் | ஆமுஷ்மிகத்திலும் ஐஹிகத்திலும் உண்டாகக்கூடிய இன்பங்களும் | கண் துயில்வோன் கால் | சயனித்தருளா நின்ற பெருமாளுடைய திருவடிகளே யாம். |

** —நமக்கு இன்பந்தரும் பொருள்கள் போக்யம், போகோபகரணம், போகஸ்தானம் என மூவகைப்படும் ; அவையெல்லாம் தமக்கு எம்பெருமான் திருவடிகளேயென்றுராயிற்று. சேணில்-உன்னதமான இடத்தில் என்றபடி ; எனவே விண்ணுலகிலென்றதாயிற்று. .... .... .... .... .... (28)

## 29. திரு வெள்ளியங்குடி.

காலளவும் போதாக் கடன்ஞாலத் தோர்கற்ற
நூலளவே யன்றி நுவல்வாரார் ?—கோலப்
பருவெள்ளி யங்குடியான் பாதகவூண் மாய்த்த
திருவெள்ளி யங்குடியான் சீர். (29)

| | | | |
|---|---|---|---|
| கோலம் பருவெள்ளி அம் குடியான் | அழகிய பெரிய கைலாசமலையை வாழுமிடமாகவுடையனை சிவபிரானது | பாதகம் ஊண் மாய்த்த | பிரமஹத்தி பாவத்தினுல் நேர்ந்த பிக்ஷாடனத்தைத் தவிர்த்தருளிய |

| | | | |
|---|---|---|---|
| திருவெள்ளியங் குடியான் | திரு வெள்ளியங்குடிப் பதியிலுறையும் பெரு மானுடைய | நூல் அளவே அன்றி | நூல்களின் அளவாகக் கூறுவதே யல்லாமல் |
| சீர் | திருக்கல்யாண குணங் களை | | |
| கால் அளவும் போதா கடல் ஞாலத்தோர் | (உலகளந்த காலத்தில்) ஒரு திருவடியினுலளவிடுதற்கும் போதாத கடல் சூழ்ந்த இம்மண் ணுலகிலுள்ளவர்களில் | நுவல்வார் ஆர் | முழுதும் உணர்ந்து சொல்லவல்லார் ஆரே னுமுளரோ ? (ஆருமிலர்.) |
| கற்ற | தாம் படித்தறிந்த | | |

* * * "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்னுமுபநிஷத்தின்படி பகவத் குணங்களை முற்ற முடியக் கூறுகில்லாமல் சிறிதே கூறிநின்ற நூல்களைக் கற்றவர்கள் அதனுல் நாம் உணர்ந்துகொண்ட சிறிதளவே கூறவல்லாரேயல்லது முழுவதும் கூற வல்லாரில்லையென்பது கருத்து. .... .... .... .... (29)

30. திருநாங்கூர்—மணிமாடக்கோயில்

**சீரே தருங்கதியில் சேருகைக்கு நானுன்னை**
**நேரே வணங்கினேன் நெஞ்சேநீ— பாரில்**
**அணிமாடக் கோயி லரங்கனுர் நாங்கூர்**
**மணிமாடக் கோயில் வணங்கு. (30)**

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | எனது மனமே! | பாரில் | இப்பூமண்டலத்தில் |
| சீரே தரும் கதியில் சேருகைக்கு | சிறப்பையே தருகின்ற நல்ல கதியில் சென்று சேர்வதற்காக | அணி மாடம் கோயில் | அழகிய மாடமாளிகை களையுடைய திருவரங் கத்தி லெழுந்தருளி யுள்ள |
| நான் உன்னை நேரே வணங் கினேன் | நானுன்னை நன்ருகத் தொழுகின்றேன் ; | அரங்கனுர் | பெரிய பெருமாளது |
| | | நாங்கூர் மணி மாடக் கோயில் | திருநாங்கூர்த் திருப்பதி களுள் ஒன்ருன மணி மாடக்கோயிற் பதியை |
| நீ | நீ (யாது செய்ய வேண் டுமென்ருல்) | வணங்கு | வணங்குவாயாக. |

31. திருநாங்கூர்—வைகுந்த விண்ணகரம்

**வணங்கேன் பிறதெய்வம் மாலடியா ரல்லாக்**
**குணங்கேடர் தங்களுடன் கூடேன்— இணங்கிநின்று**
**வைகுந்த விண்ணகரம் வாழ்த்துவே னீதன்ரே**
**வைகுந்த விண்ணகர வாழ்வு. (31)**

| | | | |
|---|---|---|---|
| நான் பிற தெய் வம் வணங்கேன் | நான் தேவதாந்தரங் களை வணங்கமாட் டேன் ; | வைகுந்த விண் ணகரம் | திருநாங்கூர் வைகுந்த விண்ணகரப் பதியை |
| | | வாழ்த்துவேன் | துதி செய்வேன் ; |
| மால் அடியார் அல்லா | ஸ்ரீ வைஷ்ணவர்க ளல்லாத | | |
| குணம்கேடர் தங்களுடன் கூடேன் | துர்க்குணவான்களோடு சேரமாட்டேன் ; | ஈது அன்ரே | இங்ஙனம் பாகவதர் களோடு கூடியிருந்து அநுபவிப்பதேயன்ரே |
| இணங்கி நின்று | ஸ்ரீவைஷ்ணவர்களோடு கூடி நின்று | வைகுந்தம் விண்நகரம் வாழ்வு | பரமபத வாழ்ச்சி. |

### 32. திருநாங்கூர் அரிமேய விண்ணகரம்

**வாழு மடியார் மடநெஞ்சே நம்மளவோ**
**தாழுஞ் சடையோன் சதுமுகத்தோன்—பாழிக்**
**கரிமேய விண்ணகரக் காவலோன் கண்டாய்**
**அரிமேய விண்ணகரத் தார்க்கு.** (32)

| | |
|---|---|
| மட நெஞ்சே | பேதை மனமே!, |
| அரிமேய விண்ணகரத்தார்க்கு | திருநாங்கூர் அரிமேய விண்ணகரப் பதியின் பெருமாளுக்கு |
| வாழும் அடியார் | தாஸபூதர்களாக வாழ்கின்றவர்கள் |
| நம் அளவோ | நாம்சிலர்மட்டுமேயோ? (அல்ல.) |
| தாழும் சடையோன் | ஜடாதரக்கடவுளான சிவபெருமானும் |
| சதுமுகத்தோன் | நான்முகனும் |
| பாழி கரி மேய விண் நகரம் காவலோன் | வலிமையையுடைய ஐராவதயானையின் மீதேறிச்செல்கின்ற சுவர்க்கலோகபதியான இந்திரனும் |
| வாழும் அடியார் கண்டாய் | அடியராகி வாழ்கின்றவர்கள் காண். |

### 33. திருநாங்கூர்—திருத்தேவனார்தொகை

**ஆர்க்கும் வலம்புரியா லண்டமு மெண்டிசையும்**
**கார்க்கடலும் வெற்புங் கலங்கினவால்—சீர்க்குந்**
**திருத்தேவ னார்தொகைமால் செவ்வாய்வைத் தூதத்**
**தருத்தேவ னார்தொகையுஞ் சாய்ந்து.** (33)

| | |
|---|---|
| சீர்க்கும் | சிறப்புப் பெற்றவரான |
| திருத்தேவனார் தொகை மால் | நாங்கூர்த் திருத்தேவனார் தொகைப்பதியெம்பெருமான் |
| | (கற்பகத் தருவைத்தேவலோகத்தினின்று பெயர்த்துக்கொணரும் போது) |
| செம் வாய் வைத்து ஊத | (திருச்சங்கைத்) தமது செவ்விய திருப்பவளத்தில் வைத்து ஊதின வளவிலே |
| ஆர்க்கும் வலம்புரியால் | பெருமுழக்கஞ் செய்த அந்தச் சங்கினால் |
| தரு தேவனார் தொகையும் | கற்பகத் தருவை நிரூபகமாகவுடையரான தேவர்களின் கூட்டமும் |
| சாய்ந்து | மூர்ச்சித்துவிழ |
| அண்டமும் எண் திசையும் | அண்டங்களும் எட்டுத்திக்குக்களும் |
| கார் கடலும் | நான்கு கரிய கடல்களும் |
| வெற்பும் | ஏழு குல பர்வதங்களும |
| கலங்கின | கலங்கிப்போயின ; |
| ஆல் | அந்தோ!, |

*** கண்ணபிரான் ஸத்யபாமைப் பிராட்டியின் விருப்பத்திற்காகப் பாரிஜாதாபஹரணம் செய்தருளினபோது நிகழ்ந்த நிகழ்ச்சியை இச்செய்யுளில் அநுஸந்தித்தவாறு. திருவரங்கத்து மாலையில் "அருட் கொண்டலன்னவரங்கர் சங்கோசையி லண்டமெல்லாம், வெருட்கொண்டிடர்பட மோகித்து வீழ்ந்தனர் வேகமுடன், தருக்கொண்டு போகப் பொறாதே தொடருஞ் சதமகனும், செருக்கொண்ட முப்பத்து முக்கோடி தேவருஞ் சேனையுமே" என்ற செய்யுளினால் இவ்வரலாற்றினைச் சிறிது விரிவாகப் பேசியுள்ளாரிவர்தாமே. .... .... .... (33)

### 34. திருநாங்கூர்—வண்புருடோத்தமம்

**சாய்ந்த திருவரங்கம் தண்வேங் கடம்குடந்தை**
**ஏய்ந்த திருமா லிருஞ்சோலை—பூந்துவரை**

வண்புரு டோத்தமமாம் வானவர்க்கும் வானவனும்
ஒண்புரு டோத்தமன்ற னூர். (34)

| | | | |
|---|---|---|---|
| வானவர்க்கும் வானவன் ஆம் | தேவாதி தேவனுகிய | குடந்தை | திருக்குடந்தையும் |
| ஒண் புருடோத்தமன் தன் | அழகிய புருஷோத்தமனுடைய | ஏய்ந்த திருமாலிருஞ் சோலை | திருவுள்ளத்திற்குப் பாங்கான திருமாலிருஞ் சோலை மலையும் |
| ஊர் | திவ்ய தேசங்களாவன, | | |
| சாய்ந்த திரு அரங்கம் | எம்பெருமான் பள்ளி கொள்ளுமிடமான திருவரங்கமும் | பூ துவரை | அழகிய துவாரகையும் |
| தண் வேங்கடம் | குளிர்ந்த திருவேங்கட மலையும் | வண் புருடோத்தமம் | திருநாங்கூர் வண் புருடோத்தமத் திருப்பதியுமாம். |

35. திருநாங்கூர்—செம்பொன் செய் கோயில்
(பெண்ணிலைமை யெய்திக் கூறுதல்.)

ஊர்வேன் மடலை ஒழிவேன் மடநாணம்
சேர்வேன் கரிய திருமாலைப்—பாரறிய
அம்பொன்செய் கோயி லரங்க னணிநாங்கூர்ச்
செம்பொன்செய் கோயிலினிற் சென்று. (35)

| | | | |
|---|---|---|---|
| பார் அறிய | பூமியிலுள்ளாரெல்லாருமறியும்படி [வெளிப்படையாக] | அம்பொன்செய் கோயில் அரங்கன் | அழகிய பொன்ஞற் செய்யப்பட்ட கோயிலையுடைய ஸ்ரீரங்கநாதனது |
| மடம் நாணம் ஒழிவேன் | (மங்கையர்க்குரிய முக்கிய லக்ஷணமாகிய) மடப்பத்தையும் வெட்கத்தையும் விட்டொழித்தவளாகி | அணி நாங்கூர் செம் பொன் செய் கோயிலினில் | திருநாங்கூரைச்சேர்ந்த செம் பொன் செய்கோயிலென்னும் திருப்பதியில் |
| | | சென்று | போய் |
| மடலை ஊர்வேன் | மடலூர்வேன்; (அதனுலேனும்) | கரிய திரு மாலை | கருநிறமுடைய எம்பெருமானை |
| | | சேர்வேன் | அடையப்பெறுவேன். |

* * * ஐயங்கார் பெண்ணிலையை யெய்திப் பேசுவது இப்பாட்டு. நம்மாழ்வார் திருவாய்மொழியில் "யாம் மடலூர்ந்தும் எம்மாழியங்கைப் பிரானுடைத் தூமடல் தண்ணந்துழாய் மலர்கொண்டு சூடுவோம்" என்றார்; திருமங்கை யாழ்வார் சிறிய திருமடலாலும் பெரிய திருமடலாலும் உலகறிய மடலூர்வேனென்றார்; அந்நடையிலே பேசிற்று இது. இதனுல் நம்முடைய காதல் அபரிமிதம் என்று காட்டினபடி. நம்முடைய திருமடல் திவ்யார்த்த தீபிகை முன்னுரையில் விசேஷங்கள் காணத்தக்கன. .... (35)

36. திருநாங்கூர்—திருத்தெற்றியம்பலம்

சென்றது காலம் திரைநரைமூப் பானவினி
என்றுகொல் சாவறியோ மென்னெஞ்சே—கன்றால்
உருத்தெற்றி யம்பலத்தைத ஓர்விளவின் வீழ்த்தான்
திருத்தெற்றி யம்பலத்தைச் சேர். (36)

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சே | எனது மனமே!, (நமக்கோவென்றால்) | திரை நரை மூப்பு ஆன | தோல் சுருங்கித் தலை நரைத்துக் கிழத்தனமுமாயிற்று; |
| காலம் சென்றது | வாழ்நாள் பெரும்பாலும் கழிந்திட்டது! | இனி | —இனிமேல் |

| | | | |
|---|---|---|---|
| சாவு என்று கொல் அறியோம் | மரணம் என்றைக்கு வந்தெய்துமென்பதறியோம்; (ஆதலால் நமது ஆயுள் முடிவதற்குள்) | உருத்து | கோபித்து |
| ஓர் விளவின் அம் பலத்தை | ஒரு விளாமரத்திலுள்ள அழகிய பழத்தைக் கண்டு (இது அசுராவேசங் கொண்டதென்றறிந்து) | கன்றால் | (அசுராவேசங்கொண்ட) இளங்கன்றைக் கொண்டு |
| | | எற்றி | வீசியெறிந்து |
| | | வீழ்த்தான் | விழத் தள்ளினவனான பெருமானுடைய |
| | | திருத்தெற்றியம் பலத்தை சேர் | திருத் தெற்றியம் பலமென்னும் திருப்பதியை நிரந்தரம் நினைப்பாயாக. |

37. திருநாங்கூர் — திருமணிக்கூடம்

**சேராது முன்செய்த தீவினைபின் செய்வதுவும்**
**வாரா தினிநீ மடநெஞ்சே—நேராக்**
**குருமணிக்கூ டத்தானைக் கொம்புபறித் தானைத்**
**திருமணிக்கூ டத்தானைச் செப்பு. (37)**

| | | | |
|---|---|---|---|
| மடம் நெஞ்சே | பேதை மனமே!, | நீ செப்பு | துதி செய்வதற்கு நீ உதவுவாயாக; (அவ்வாறு செய்வாயாயின்) |
| நேரா | எதிர்த்து | | |
| குரு மணி கூடத்து ஆனை | சிறந்த ரத்தினங்களிழைத்துச் செய்த கூடத்திலிருந்த குவலயாபீடமென்னும் கம்ஸனது மதயானையை | முன் செய்த தீவினை சேராது | முற்பிறப்புகளிற் செய்த ஸஞ்சித கருமங்களெனப்படுகிற பாவங்கள் பலன் தரமாட்டா; |
| கொம்பு பறித்தானை | தந்தங்களைப் பிடுங்கிக் கொன்றொழித்தவனும் | பின் செய்வதுவும் | அபுத்தி பூர்வகமாக இனிச் செய்யப்படும் பாவங்களும் |
| திருமணிக் கூடத்தானை | நாங்கூர்த் திருமணிக் கூடப்பதியிலுள்ளவனுமான பெருமானை | இனி வாராது | இனிமேல் அணுகமாட்டா. |

38. திருநாங்கூர் — காவளம்பாடி

**செப்பேன் மனிதருக்கென் செஞ்சொல் தமிழ்மாலை**
**கைப்பேன் பிறதெய்வம் காண்பாரை—எப்போதும்**
**காவளம்பா டித்திருமால் கால்தா மரைதொழுது**
**நாவளம்பா டித்திரிவேன் நான். (38)**

| | | | |
|---|---|---|---|
| நான் எப்போதும் என் செம்சொல் தமிழ் மாலை மனிதருக்கு செப்பேன் | நான் ஒரு காலத்திலும் எனது செவ்விய தமிழ்ப் பாமாலை கொண்டு நரஸ்துதி செய்யமாட்டேன்; | காவளம்பாடி திருமால் | திருநாங்கூர்க் காவளம் பாடிப் பெருமானுடைய |
| | | கால் தாமரை தொழுது | பாதாரவிந்தங்களை வணங்கி |
| பிற தெய்வம் காண்பாரை கைப்பேன் | தேவதாந்தர பஜனம் செய்யும் அவைஷ்ணவர்களை வெறுப்பேன்; | நா வளம் பாடி திரிவேன் | (எனது) நாவினால் வளமாகக் கவிபாடிக்கொண்டு காலங்கழிப்பேன். |

39. திருநாங்கூர் — திருவெள்ளக்குளம்

நானடிமை செய்யவிடாய் நானானே னெம்பெருமான்
தானடிமை செய்யவிடாய் தானானான்—ஆனதற்பின்
வெள்ளக் குளத்தே விடாயிருவ ருந்தணிந்தோம்
உள்ளக் குளத்தேனை யொத்து. (39)

| | | | |
|---|---|---|---|
| நான் அடிமை செய்ய | நான் பகவத் கைங்கரியஞ் செய்யும் விஷயத்தில் | ஆனதன் பின் | இங்ஙனம் இருவரும் விடாய் கொண்டபின்பு |
| விடாய் நான் ஆனேன் | விடாய் தானே நானாக வடிவு கொண்டவனாயினேன்; | வெள்ளக் குளத்தே | நாங்கூர்த் திருவெள்ளக் குளத் திருப்பதியில் |
| | | இருவரும் உள்ளம் | யாங்களிருவரும் மனத்தில் |
| எம்பெருமான் தான் அடிமை கொள்ள விடாய் தான் ஆனான் | எம்பெருமானேவென்றல் என்னை அடிமை கொள்ளும் விஷயத்தில் விடாய் தானே வடிவெடுத்தவனாயினான்; | குளம் தேனை ஒத்து | சர்க்கரைப் பாகையும் தேனையும் போன்று (ஒன்று சேர்ந்து) |
| | | விடாய் தணிந்தோம் | எங்கள் வேட்கை தணியப் பெற்றோம். |

**** ஆளவந்தார் ஸ்தோத்ரரத்னத்தில் "நிமஜ்ஜதோநந்த பவார்ணவாந்தச் சிராய மே கூலமிவாஸி லப்த:, த்வயாபி லப்தம் பகவந் இதாநீம் அநுத்தமம் பாத்ரம் இதம் தயாயா:" என்றருளிச் செய்த கணக்கிலே இப்பாட்டு அமைந்தபடி. எம்பெருமானுக்கு அடிமை செய்ய வேணுமென்கிற விடாய் நமக்கிருப்பது போல, நம்மை அடிமை கொள்ளவேணுமென்னும் விடாய் அவனுக்கு முள்ளது. சேதநனும் ஈச்வரனும் கலந்தால் இருவருடைய விடாயும் தணியுமென்பது தத்துவம். ஈற்றடியில் குடம் (கூடம்) என்னும் வடசொல் குளமெனத் திரிந்தது. வெள்ளக்குளமென்ற திவ்யதேசத் திருநாமத்திற்கேற்ப விடாய் தணிந்தோமென்றது சொற்சுவை.* (39)

### 40. திருநாங்கூர் — பார்த்தன்பள்ளி

**ஒத்தமர ரேத்து மொளிவிசும்பும் பாற்கடலும்**
**இத்தலத்திற் காண்பரிய வென்னெஞ்சே!—சித்துணர்ந்த**
**தீர்த்தன்பள் ளிக்கிருந்து செப்பவெளி நின்றானைப்**
**பார்த்தன்பள் ளிக்குட் பணி.** **(40)**

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சே | எனது மனமே!, | தீர்த்தன் | பரிசுத்த ஹ்ருதயனை ப்ரஹ்லாதாழ்வான் |
| அமரர் ஒத்து ஏத்தும் ஒளி விசும்பும் | நித்திய ஸூரிகள் ஒன்றுகூடித் துதிக்கின்ற பரமபதமும் | பள்ளிக்கு இருந்து | பள்ளியிலோதும் சிறுவனாயிருந்தும் |
| பால் கடலும் | திருப்பாற்கடலும் | செப்ப | எம்பெருமான் எங்குமுளனென்று கூற |
| இ தலத்தில் காண்பு அரிய | இவ்வுலகிற் காணமுடியாதவை; (ஆதலால் அவற்றிலாசையை யொழித்து) | வெளி நின்றானை | அப்போதே நரசிங்க மூர்த்தியாக வெளிப்பட்ட எம்பெருமானை |
| சித்து உணர்ந்த | ஆத்ம ஸ்வரூபத்தை நன் குணர்ந்த | பார்த்தன் பள்ளிக்குள் சென்று பணி | பார்த்தன் பள்ளித் தலத்திற் சென்று பணிவாயாக. |

**** எம்பெருமானுடைய பரவ்யூஹ விபவ அந்தர்யாம்யர்ச்சாவதாரங்களுள் முந்திய நான்கு நிலைகளும் நமக்கு இப்போது பயன்படமாட்டாவாதலால் அர்ச்சாவதாரமே நமக்குப் புகல் என்னும் நாற்கொள்கை இதில் விளக்கப்பட்டதாம். முதலடியில் பரவ்யூஹங்களை மட்டும் கூறியது விபவ அந்தர்யாமிகளுக்கும் உபலக்ஷணமென்க.*

**சோழநாட்டுத் திருப்பதிகள் முற்றுப் பெற்றன.**

---

# சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதுக்கும் ஆழ்வார் பாடல் குறிப்பு.

1. **திருவரங்கம்பெரியகோயில்.** ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும்பாடிய தலம்இது. **பொய்கையார்***ஒன்று மறந்தறியேன் (6), **பூதத்தார்***மனத்துள்ளான் வேங்கடத்தான் (28), *பயின்ற தரங்கம் (46), *தமருள்ளம் தஞ்சை (70), *திறம்பிற்றினி யறிந்தேன் (88), **பேயார்**—* விண்ணகரம் வெஃகா (62), **திருமழிசைப் பிரான்** (நான்முகனில்) * பாலில் கிடந்ததுவும் (3), * அவனென்னையாளி (30), * நாகத்தணைக் குடந்தை (36), * ஆள்பார்த் துழிதருவாய் (60). (திருச்சந்த விருத்தத்தில்) *அரங்கனே தரங்கநீர் (21), * கொண்டை கொண்ட (49). * வெண்டிரைக் கருங்கடல் (50), * சரங்களைத் துரந்து (51), * பொற்றைபுற்ற (52), * மோடியோடிலச்சை (53), * இலைத்தலை (54), * மன்னுமா மலர்க்கிழத்தி (55), * சுரும்பரங்கு (93), * பொன்னிசூழரங்கமேய (119). **நம்மாழ்வார்**—(திருவிருத்தத்தில்) * தண்ணந்துழாய் வளை..............திருவரங்கா* (28), (திருவாய்மொழி) * கங்குலும் பகலும் பதிகம் 7—2. **குலசேகராழ்வார்**—பெருமாள் திருமொழி 1, 2, 3. பதிகங்கள். 8—10. * தேவரையுமசுரரையும்..................அரங்க நகர் துயின்றவனே. **பெரியாழ்வார்**—2—7—2 *கருவுடை மேகங்...........திருவரங்கத்தே கிடந்தாய் * 2—7—8. * சீமாலிகன் .... அணியரங்கத்தே கிடந்தாய் * 2—9—4 * கொண்டல் வண்ணா....கோயிற் பிள்ளாய் * 2—9—11. * வண்டுகளித்........தென்னரங்கன்.* 3-3-2 * கன்னி நன்மா........காவிரித் தென்னரங்கம். 4—8 * மாதவத்தோன் முதல் மூன்று பதிகங்கள். **ஆண்டாள்**—நா—தி. 4—1. * தெள்ளியார்............... பள்ளிகொள்ளுமிடத்து.* 11. * தாமுகக்கும்—பதிகம். **தொண்டரடிப்பொடிகள்.** திருமாலை 45, திருப்பள்ளியெழுச்சி 10. **திருப்பாணாழ்வார்** * அமலனாதிபிரான் 10.

### திருமங்கையாழ்வார் (திருவரங்கம்)

பெரிய திருமொழி 1—8—2 * பள்ளியாவது........அரங்கம். 3—7—6 * என் துணையென்று........அரங்கத்துறையு மின் துணைவன் * 5—4. * உந்திமேல் நான்முகனை * முதலாக ஐந்து பதிகங்கள். 6—6—9. * தாராளன் தண்ணரங்க வாளன்.* 7—3—4 * உரங்களாலியன்ற........அரங்கமாளி. 8-2-7 * தரங்க நீர்........ஊரரங்கமே யென்பது. 9—9—2 *புனைவளர்........அரங்க நகருள் முனைவனை.* 11—3—7 * கண்ணன் மனத்........அரங்கமும் பாடோமே.* 11—8—8 *அணியார்........அரங்கநகரப்பா. திருக்குறுந்தாண்டகம் (7) * இம்மையை........வியன் திருவரங்கமேய.* (12) * ஆவியை யரங்கமாலை,* (13) இரும்பனன்றுண்ட நீரும்........அரங்கமா கோயில்.* (19) * பிண்டியார்........அரங்கம்.* சிறிய திருமடல் *ஆராமஞ் சூழ்ந்த வரங்கம் .* பெரிய திருமடல்-* மன்னுமரங்கத் தெம்மாமணியை * திருநெடுந்தாண்டகம் (10) * பொன்னானாய்-குடபாலானாய் * (11) * பட்டு டுக்கும்........எம்பெருமான் திருவரங்கமெங்கேயென்னும் * (12) *நெஞ்சுருகி........அணியரங்கமாடுதுமோ * (14) * முளைக் கதிரை........அரங்கமேய வந்தணனை * (18) * கார்வண்ணம்.......எம்பெருமான் திருவரங்கம் * (19) * முற்றுராவன........அணியரங்கமாடுதுமோ * (23) * உள்ளூருஞ் சிந்தை........சேலுகளுந் திருவரங்கம் நம்மூர். (24) * இருகையில் சங்கிவை...............புனலரங்கமூரென்று.* (25.) *மின்னிலங்கு திருவுருவும்.......புனலரங்கமூரென்று. * ... ... ... *

2. **உறையூர்.** (ஒருவர் பாடல்) திருமங்கை. பெ தி. 9—2—5. * கோழியுங் கூடலும் * கோழி - உறையூர்.

3. **திருத் தஞ்சை.** (இருவர் பாடல்) பூதத்தாழ்வார் 70. * தமருள்ளம் தஞ்சை.* **திருமங்கை.** பெ-தி. 1—1—6. * தஞ்சை மாமணிக் கோயிலே வணங்கி * 2—5—3 * உடம்புருவின்........தடம் பருகு கருமுகிலைத் தஞ்சைக் கோயில் * 7—3—9 *என் செய்கேன்.......தஞ்சையாளியை.*

4. **அன்பில்.** (ஒருவர் பாடல்)திருமழிசை. நான்மு.36. * நாகத்தணை........பேரன்பில்.*

5. **கரம்பனூர்.** (உத்தமர் கோயில்) (ஒருவர் பாடல்.) **திருமங்.** பெ-தி. 5—6—2 * பேரானை........கரம்பனூருத்தமனை.*

6. **திருவெள்ளறை.** (இருவர் பாடல்). பெரியாழ்வார் திருமொழி 1—5—8 * உன்னையு மொக்கலையில்...வெள்ளறையாய்.* 2—8 * இந்திரனோடு பிரமன்-பதிகம். **திருமங்கையாழ்வார்.** பெ-தி. 5—3. * வெய்யமாமழு-பதிகம். 10—1—4 * துளக்கமில் சுடரை....வெள்ளறைக் கண்டுமே.* சிறிய மடல்—* பேராமருதிறுத்தான் வெள்ளறையே.* பெரிய மடல் * வெள்ளறையுள் கல்லறைமேல் பொன்னை *

7. **புள்ளம்பூதங்குடி.** (ஒருவர் பாடல்) **திருமங்கை.** பெ-தி. 5—1. * அறிவதரியான் -10.

8. **திருப்பேர் நகர்.** (அப்பக் குடத்தான்). நால்வர் பாடல். **திருமழிசை.** நான்மு. 36. * நாகத்தணை...பேர் அன்பில்.* **நம்மாழ்வார்.** திருவாய். 10—8. * திருமாலிருஞ் சோலைமலை யென்றேன்—பதிகம். **பெரியாழ்வார்** திருமொழி 2—5—1. * பின்னை மணாளனைப் பேரில் கிடந்தானை * 2—6—2 * கொங்குங்குட....பேரும் * 2-9-4. * கொண்டல் வண்ணா...திருப்பேர்க் கிடந்த திருநாரணா *

**திருமங்கையாழ்வார்** (திருப்பேர்நகர்.)

பெரிய திருமொழி 1—5—4 * ஊரான் குடந்தை......வற்றுவருபுனல் சூழ் பேரான்.* 5—6—2 * பேரானைக் குறுங்குடி. 5—9. * கையிலங்காழிசங்கன்—பதிகம். 7—6—9. * பேரானைக் குடந்தை * 10—1—4 * துளக்கமில்....பேரில் வணங்கிப் போய் * 10—1—10 * பெற்றமாளியைப் பேரில் மணாளனை.* திருக்குறுந். (17) * பேசினார்...பேருளான் பெருமை பேசி.* (19) * பிண்டியார்....கச்சி பேர் மல்லை * சிறிய மடல். * மதிள்கச்சியூரகமே பேரகமே.* பெரிய மடல் * பேரில் பிறப்பிலியை * திருநெடுந். (8) * நீரகத்தாய்....காவிரியின் தென்பால் மன்னு பேரகத்தாய் * (9) * வங்கத்தால்...பேராய் * (19) * முற்றாரா....பேர்பாடி.*

9. **ஆதனூர்.** (ஒருவர்பாடல்) திருமங்கை. பெரியமடல். *ஆதனூராண்டளக்குமையனை.*

10. **திருவழுந்தூர்.** (ஒருவர் பாடல்) **திருமங்கை.** பெ-தி. 7—5. * தந்தை காலில் பெருவிலங்கு முதலாக நான்கு பதிகங்கள். 10—1—7. * சுடர்கொளா.......அழுந்தையில் கண்டு.* சிறிய மடல் * சேறை திருவழுந்தூர் * பெரிய மடல். * அள்ளல் வாயன்ன மிரைதேரழுந்தூ ரெழுஞ் சுடரை.* திருநெடும். (15) * கல்லுயர்ந்த......அணியழுந்தூர் நின்றுகந்த வம்மான்.* (26) * தேமருவுபொழில் .....அணியழுந்தூர் நின்றானுக்கு.*

11. **சிறுபுலியூர்.** (ஒருவர் பாடல்) **திருமங்கை.** பெ-தி. 7-9. * கள்ளம்மனம்வில்லும் 10.

12. **திருச்சேறை.** (ஒருவர் பாடல்) **திருமங்கை.** பெ-தி. 7—4. * கண்சோர வெங்குருதி=பதிகம். 10—1—6. * வானையாரமுதம்........சேறையில் கண்டு போய்.* சிறிய மடல். * சேறை திருவழுந்தூர் * பெரிய மடல் * மன்னிய தண் சேறை*

13. **தலைச்சங்க நாண்மதியம்.** (ஒருவர் பாடல்) திருமங்கை. பெ-தி. 8—9—9. * கண்ணூர் கண்ணபுரம்......தலைச் சங்க மேற்றிசையுள் விண்ணோர் நாண் மதியை * பெரிய திருமடல் * நன்னீர்த் தலைச்சங்க நாண் மதியை. *

14. **திருக்குடந்தை.** (எழுவர் பாடல்) பூதந்தார்—70. * தமருள்ளம்.......மதிள் குடந்தையென்பரே.* (97) * எங்கள் பெருமான் .....குடமூக்கில் * **பேயார்.** (30) * சேர்ந்த திருமால் கடல் குடந்தை.* (62) * விண்ணகரம் வெஃகா......மண்ணகத்த தென் குடந்தை * **திருமழிசை.** நான்மு. 36. * நாகத்தணைக் குடந்தை.* திருச்சந்த. 56 பாசுரம் முதல் 61 வரை வரிசையாக 6 பாசுரங்கள். **நம்மாழ்வார்.** திருவாய். 5—8. * ஆராவமுதே—பதிகம். 8—2—6. * தொல்லையஞ் சோதி ·...குடந்தை மாமலர்க்கண் வளர்கின்ற மாலே. 10—9—7. * மடந்தையர் வாழ்த்தலும்....... குடந்தையெங் கோவலன்.* **பெரியாழ்வார்.** திருமொழி 2—6—2. * கொங்குங் குடந்தையும் * 2—6—6 * ஆலத்திலையான்.....குடந்தைத் கிடந்தார்க்கு.* 2—7—7 * குடங்களெடுத்து.....குடந்தைக் கிடந்த வெங்கோவே.* **ஆண்டாள்.** நா-தி. 13—2. * பாலாலிலையில்......குடந்தைக் கிடந்த குடமாடி.*

## திருமங்கையாழ்வார்

பெரிய திருமொழி. 1—1—2. * ஆவியே யமுதே......குடந்தையே தொழுது.* 1—1—7. * இற்பிறப்பறியீர் ...... குடந்தையே தொழுமின். 1—5—4. * ஊரான் குடந்தையுத்தமன் * 2—4—1. * அன்றாயர் குலக் .....திருவாலி குடந்தை * 3—6—5. * வாளாய கண் பனிப்ப .....தண் குடந்தை நகராளா * 3—6—8, * குயிலாலும் வளர் பொழில் சூழ் தண் குடந்தை * 5—5—7. * வாராளு மிளங் கொங்கை......தண் குடந்தை நகராளன் * 6—8—9 * பொங்கேறு நீள் சோதி ......குடந்தைக் கிடந்தானை * 6—10—1 * கிடந்த நம்பி குடந்தை மேவி * 7—3—3 * வந்த நாள் வந்து ..... குடந்தைத் தலைக் கோவினை. 7—6—9 * பேரானைக் குடந்தைப் பெருமானை * 8—9—5 * வந்தாயென் மனத்தே......குடந்தைக் கிடந்துகந்த மைந்தா * 9—2—2 * தோடவிழ் நீலம்........குடந்தைக் கிடந்த * 10—1—6 * வானையாரமுதம்........குடந்தைச் சென்று காண்டுமே * 10—10—8 * இங்கே போதுங்கொலோ......குடந்தைக் கிடந்த மால் * 11—3—4 * அறியோமேயென்று ......வியன் குடந்தை * 11—6—9 *அண்டத்தின் முகடழுந்த......தண் குடந்தை நகர் பாடி.* **திருக்குறுந்.** (6) * மூவரில் முதல்வனாய.......குடந்தை மேய * (14) * காவியை வென்ற......சூழ்புனற் குடந்தையானை * திருவெழுகூற்றிருக்கைப் பிரபந்தம். சிறிய திருமடலில் * காரார் குடந்தை* பெரிய மடல். * பூங்குடந்தைப் போர்விடையை.* **திருநெடுந்.** (17) * பொங்கார்மெல்... தண் குடந்தை நகரும் பாடி.* (19) * முற்றாராவன......தண்குடந்தை......பொற்றாமரைக் கயம் * (29) * அன்றாயர்... ·தண்குடந்தைக் கிடந்த மாலை. *

15. **திருக்கண்டியூர்.** (ஒருவர் பாடல்) திருமங்கை. திருக்குறுந். (19) பிண்டியார்.... உலகமேத்துங் கண்டியூர்.*

16. **திருவிண்ணகர்.** (மூவர் பாடல்) பேயார். (61) * பண்டெல்லாம் வேங்கடம்....விண்ணகர்.* (62) * விண்ணகரம் வெஃகா * **நம்மாழ்வார்.** திருவாய்மொழி. 6—3. * நல்குரவும் செல்வும்—பதிகம். **திருமங்கையாழ்வார்.** பெ-தி. 6—1. * வண்டுணு நறுமலர் முதல் மூன்று பதிகங்கள். 10—1—8 * பத்தராவியை.......விண்ணகர்க் காண்டுமே.* சிறிய மடல். * காரார் மணிநிறக் கண்ணனூர் விண்ணகரம்.* பெரிய மடல், * மின்னிடையாள் நாயகனை விண்ணகருள் பொன்மலையை * திருநெடுந். (29) * அன்றாயர்... ·விண்ணகரம் மருவி நாளும் நின்றானை*

17. **திருக்கண்ணபுரம்.** (ஐவர் பாடல்) **நம்மாழ்வார்.** திருவாய்மொழி 9—10. * மாலை நண்ணி * பதிகம். **குலசேகரர்** பெருமாள் திருமொழி (8) * மன்னு புகழ்ப் பதிகம்

பெரியாழ்வார். திருமொழி. 1—5—8. * உன்னையு மொக்கலையில்...கண்ண புரத்தமுதே. ஆண்டாள். நாச்சியார் திருமொழி (4—2). * காட்டில் வேங்கடம் கண்ணபுர நகர்.* திருமங்கையாழ்வார். பெரிய திருமொழி எட்டாம் பத்து பூர்த்தியாக பத்து பதிகங்கள். சிறிய திருமடல்—* சீரார் கணபுரம்.* பெரிய திருமடல்—* கணபுரத்துப் பொன்மலை போல் நின்றவன்தன் * நான் வணங்குங் கண்ணனைக் கண்ணபுரத்தானை. திருநெடுந்தாண்டகம். (10) * குணபாலமதயானாய் * (16) * கன்றுமேய்த் தினிதுகந்த காளாய்!...... கணபுரத் தென்கனியே * (27) * செங்கால மடநாராய்......திருக்கண்ணபுரம் புக்கு *

18. திருவாலி திருநகரி, (இருவர் பாடல்) குலசேகராழ்வார். பெருமாள் திருமொழி (8—7). * ஆலினிலைப் பாலகனாய் .... ஆலிநகர்க் கதிபதியே.* திருமங்கையாழ்வார். பெரிய திருமொழி (2—4—1). * அன்றாயர் குலக்கொடியோடு....புனல் நறையூர் திருவாலி குடந்தை.* (3—5) * வந்துனதடியேன் முதலாக மூன்று பதிகங்கள். (4—9—2) * சிந்தை தன்னுள்......அந்தணாலிமாலே * (6—8—2) * முன்னீரை முன்னாள்.... தென்னாலிமேய. (8—9—6) * எஞ்சாவெந் நரகத்து.... வயலாலி மைந்தனையே* (8—9—8) * கற்றார் பற்றறுக்கும்.. வற்றா நீர்வயல்சூழ் வயலாலியம்மானை * (10—1—3) * வேலையாலிலை.... மாலையாலியில்.* (11—7—3) * தூயானைத் தூய ......தென்னாலி மேயானை.* (11—8—6) * படை நின்ற .....வயலாலி மணாளா.* சிறிய திருமடல். * பேராலி தண்கால் * பெரிய திருமடல் * மாமலர் மேலன்னந் துயிலு மணி நீர்வயலாலி. திருநெடுந்தாண்டகம். (12) * நெஞ்சுருகி..... வம்பார் பூவயலாலிமைந்தா.* (22) * நைவளமொன்றாராயா.....இதுவன்றோ எழிலாலி.*

19. திருநாகை. (ஒருவர்பாடல்) திருமங்கை பெ-தி. 9—2. * பொன்னிவர்—பதிகம்.

20. திருநறையூர். (ஒருவர்பாடல்) திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி. 2—4—1 *அன்றாயர்......நன்றாய புனல் நறையூர்.* (4—9—2) * சிந்தை தன்னுள்...... நறையூர் நின்ற நம்பீ.* 6—3—3 * மானேய் நோக்கு நல்லார் .... திருநறையூர்த் தேனே.* (இனி பதிகங்கள் 10) 6—4 * கண்ணுஞ் சுழன்று முதல் 7—3. *சினவிற் செங்கண் * அளவாக. (7—7—4) * பரனே பஞ்சவன்.....நரனே நாரணனே திருநறையூர் நம்பீ.* (8—2—2) * தீணிலா முற்றத்து......நன்று நன்று நறையூரர்க்கே.* (10—1—5) * சுடலையில்......நறையூர்க்கண்டு.* சிறிய திருமடல். * நறையூர் திருப்புலியூர். பெரிய திருமடல். * மன்னுமறையோர் திருநறையூர் மாமலைபோல்.* தென்னறையூர் மன்னுமணி மாடக்கோயில்* திருநெடுந்தாண்டகம். (16) * கன்று மேய்த்து...... விரிபொழில் சூழ் திருநறையூர் நின்றாய்.* (17) *பொங்கார்மெல்.......நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே.*

21. நந்திபுரவிண்ணகரம். (ஒருவர் பாடல்) திருமங்கை பெ. தி. (5-10)* தீதறு நிலம் 10

22. திருவிந்தளூர் (ஒருவர்பாடல்) திருமங். பெ. தி, (4-9)* நும்மைத்தொழுதோம் 10. பெரிய திருமடல்* இந்தளூரந்தணனை.*



23. தில்லைத்திருச்சித்திரகூடம். (இருவர் பாடல்) குலசேகராழ்வார். பெருமாள் திருமொழி (10) *அங்கணெடுமதிள்-பதிகம். திருமங்கையாழ்வார். பெ. தி. 3-2 *ஊன்வாட வுண்ணாது-பதிகம். 3-3. *வாடமருதிடை-பதிகம். பெரிய திருமடல்—*தென் தில்லைச் சித்திரகூடத் தென்செல்வனை.*

24. காழிச்சீராம விண்ணகரம். (ஒருவர்பாடல்) திருமங்கை. பெ. தி. 3—4. *ஒரு குறள் 10.

25. கூடலூர். (ஒருவர்பாடல்) திருமங்கை. 5—2. *தாந்தம் பெருமை—பதிகம்.

26, திருக்கண்ணங்குடி. (ஒருவர்பாடல்) திருமங்கை. பெ. தி. 9-1. *வங்கமாமுந்நீர்—பதிகம்.

27. திருக்கண்ணமங்கை. (ஒருவர் பாடல்) திருமங்கை பெ. தி. 7-6-5. *கஞ்சனைக் காய்ந்தானைக் கண்ணமங்கையுள் நின்றானை.* (1-10) *பெரும்புறக் கடலை-பதிகம். 10-1-1. *ஒரு நல் சுற்றம்......கண்ணமங்கையுள் காண்டுமே. 11-6-7. *மண்ணாடும் விண்ணாடும்..... கண்ணாளன் கண்ணமங்கை நகராளஸ்* சிறிய திருமடல் *ஆராமஞ்சூழ்......கணமங்கை. *பெரியமடல். *கணமங்கைக் கற்பகத்தை*.

28. கபிஸ்தலம். (ஒருவர் பாடல்) திருமழிசை. நான்முகன் 50. *கூற்றமும் சாரா... ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்.*

29. திருவெள்ளியங்குடி. (ஒருவர் பாடல்) திருமங்கை பெ.தி. 4-10. *ஆய்ச்சியரழைப்ப 10.

(திருநாங்கூர்த் திருப்பதிகள் பதினொன்று)

(திருமங்கையாழ்வாரொருவரே பாடினார்—ஒவ்வொரு பதிகம்)

30. மணிமாடக்கோயில். பெரிய திருமொழி 3-8. *நந்தாவிளக்கே.* பெரிய திருமடலில் *நாங்கூரில் மன்னுமணி மாடக்கோயில் மணாளனை.*

31. வைகுந்த விண்ணகரம். 3—9. *சலங்கொண்ட*

32. அரிமேய விண்ணகரம். 3—10. *திருமடந்தை*

33. திருத்தேவனார் தொகை. 4—1. *போதலர்ந்த*

34. வண்புருடோத்தமம். 4—2. *கம்பமாகடல்*

35. செம்பொன் செய்கோயில். 4—3. *பேரணிந்து*

36. திருத்தெற்றியம்பலம். 4—4. *மாற்றரசர்*

37. திருமணிக்கூடம். 4—5. *தூம்புடைப்பனை*

38. காவளம்பாடி. 4—6. *தாவளந்துலகம்*

39. திருவெள்ளக்குளம். 4—7. *கண்ணார்கடல்போல்*

40. பார்த்தன்பள்ளி. 4—8. *கவளயானை கொம்பொசித்த.*

— சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதுக்கும் ஆழ்வார்பாடல் குறிப்பு முற்றிற்று. —

## பாண்டி நாட்டுத் திருப்பதிகள்—18.

### 1. திருமாலிருஞ் சோலைமலை.

**பணிந்தேன் திருமாலைப் பாமாலை தாளில்**
**அணிந்தே னருள்தஞ்ச மாகத்—துணிந்தேன்**
**திருமா லிருஞ்சோலை சேர்ந்தே னெனக்கு**
**வருமா லிருஞ்சோதி வான். (41)**

| | | | |
|---|---|---|---|
| திருமாலிருஞ் சோலை சேர்ந்தேன் | அழகர் திருமலையை யடைந்தேன்; | அருள் தஞ்சம் ஆக துணிந்தேன் | அப்பிரானது திருவருளையே தஞ்சமாக உறுதி கொண்டேன்; |
| திரு மாலை பணிந்தேன் | அப்பெருமானை யடி பணிந்தேன்; | | (ஆகஇச்செயல்களினால்) |
| பா மாலை தாளில் அணிந்தேன் | சொல்மாலையை அப்பெருமானது திருவடிகளில் ஸமர்ப்பித்தேன்; | இரு சோதி வான் எனக்கு வரும் | பெரிய ஒளிவடிவமான பரமபதம் எனக்குக் கிடைக்கும்.(ஆல்-அசை) |

2. திருக்கோட்டியூர்.

வான்பார்க்கும் பைங்கூழ்போல் வாளா வுனதருளே
யான்பார்க்க நீபார்த் திரங்கினுய்—தேன்பார்ப்பின்
ஓசைத் திருக்கோட்டி யூரானே யின்னமுமென்
ஆசைத் திருக்கோட்டி யாள். (42)

| | | | |
|---|---|---|---|
| தேன் பார்ப்பின் ஓசை | வண்டுக் குட்டிகளின் ரீங்கார வொலியை யுடையதான | உனது அருளே யான் பார்க்க | உனது திருவருளையே யான் எதிர்நோக்கியிருக்க |
| திருக்கோட்டியூரானே | திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கும் பெருமானே ! | நீ பார்த்து இரங்கினுய் | அதனையே கொண்டு நீ என்பால் அருள் செய்தாய் ; |
| வான் பார்க்கும் பை கூழ் போல் | மழையையே எதிர் பார்த்திருக்கின்ற பசுமைதங்கிய பயிரைப் போல | இன்னமும் | —இனிமேலும் |
| | | என் ஆசை திருக்கு ஓட்டி | எனது விஷயாந்தரப் பற்றுகிய விபரீதத்தை போக்கி |
| வாளா —எப்போதும் | | ஆள் | —அடிமை கொள்வாயாக. |

3. திருமெய்யம்

(பெண்ணிலைமை யெய்திக் கூறுதல்.)

ஆளா யுனக்கன்பா யாசையாய் நாணிலியாய்
வாளா மனைவியென்று வாழ்வேனைக்—கேளாய்
திருமெய்ய மாயா சிலைகால் வளைத்து
வருமெய்ய மாயா மதன். (43)

| | | | |
|---|---|---|---|
| திரு மெய்யம் மாயா | திருமெய்யத்திருப்பதியிலுறையும் மாயவனே ! | கேளாய் | ஏனென்று கேளாமல் உபேக்ஷித்து விட்டாய்; |
| உனக்கு ஆள் ஆய் | உன்பால் அடிமைப் பட்டு | மாயா மதன் | தொலைந்தொழிய மாட்டாத மன்மதன் |
| அன்பு ஆய் | அன்பே வடிவெடுத்தவளாகி | சிலை கால் வளைத்து | தனது கருப்பு வில்லை நாணேற்றி வளைத்துப் பிடித்துக்கொண்டு |
| ஆசை ஆய் —ஆசை கொண்டு | | | |
| நாண் இலி ஆய்—வெட்கமற்றவளாய் | | எய்ய | என்மீது அம்புகளைப் பொழிய |
| வாளா மனைவி என்று வாழ்வேனை | வீணாக உன் மனைவி என்று பெயர் சுமந்து கிடக்குமென்னை | வரும் | வருகின்றனே ! (என் செய்வேனிதற்கு?) |

*** காதலனோடு கலந்து பிரிந்து அப்பிரிவை ஆற்றாத தலைவி இரங்கிக் கூறும் பாசுரமாக அமைக்கப்பட்டது இது. மதன்—மதனனென்ற வடசொல்திரிபு.(43)

4. திருப்புல்லாணி.

மதயானை கோள்விடுத்து மாமுதலை கொன்ற
கதையா லிதயங் கரையும்—முதலாய
புல்லாணி மாலே புறத்தோர் புகழிருப்பு
வல்லாணி யென்செவிக்கு மாறு.

| | | | |
|---|---|---|---|
| முதல் ஆய புல்லாணி மாலே | முழுமுதற் கடவுளாகிய திருப்புல்லாணி யெம் பெருமானே !, | இதயம் கரையும் | எனது மனம் உருகாநின்றது ; (இப்படிப்பட்ட உன் கீர்த்தியல்லது) |
| மதம் யானை கோள் விடுத்து | கஜேந்திராழ்வானுடைய துன்பத்தைப் போக்கி | புறத்தோர் புகழ் | தேவதாந்தரங்களினுடைய கீர்த்தியானது |
| | | என் செவிக்கு மாறு | எனது காதுகளுக்கு விரோதமான |
| மா முதலை கொன்ற கதையால் | பெரிய முதலையைக் கொன்றொழித்த இதிஹாஸத்தினால் | இரும்பு வல் ஆணி | வலிய இருப்பாணி போல் துன்புறுத்துவதாகும். |

### 5. திருத்தண்காலூர்.

(பெண்ணிலைமை யெய்திப் பாடும் பாட்டு.)

**மாறுபட வாடையெனும் வன்கால்வந் தென்முலைமேல்**
**ஊறுபட வூர்ந்த உளைவெல்லாம்—ஆறத்**
**திருத்தண்கா லூரான் திருத்தண்டு ழாயின்**
**மருத்தண்கா லூராதோ வாய்ந்து. (45)**

| | | | |
|---|---|---|---|
| வாடை எனும் வல் கால் | வாடையென்று பேர் பெற்ற வலிய காற்றானது | மாற | —அடியோடு நீங்கும்படி |
| மாறுபட வந்து | எனக்கு விரோதமாக வந்து | திருத்தண்கா லூரான் | திருத்தண்கால் திருப்பதி யெம்பெருமானுடைய |
| என் முலை மேல் ஊறுபட ஊர்ந்த | எனது தனங்களின்மீது தாபமுண்டாகும்படி உலாவிச்சென்றதனாலுண்டாகிய | திரு தண் துழாயின் | அழகிய குளிர்ந்த திருத்துழாயினது |
| | | மரு தண் கால் | நறுமணமுள்ள குளிர்ந்த காற்றானது |
| | | வாய்ந்து ஊராதோ | நெருங்கி வீசாதோ ? |
| உளைவு எல்லாம் | —வருத்தம் முழுவதும் | | |

*** தலைவனோடு புணர்ந்து பிரிந்த தலைவி வாடைக்கு வருந்திக் கூறும் பாசுரமாக இது அமைக்கப்பட்டது. பிராட்டியினுடைய பிரிவில் ஆற்றாத பெருமாள் "வாஹி வாத! யத: காந்தா தாம் ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருச" என்று சொன்ன சுலோகம் இங்கு நினைக்கத் தக்கது. விரஹத்தில் உத்தீபகங்களான பொருள்களில் வாடையுமொன்றென்பதை "மேவு தண்வாடை வெவ்வாடையாலோ" என்ற திருவாய்மொழிப் பாசுரத்தினுமறிக. .... .... .... (45)

### 6. திருமோகூர்.

(இதுவும் பெண்மை யெய்திப் பேசும் பாசுரம்)

**வாயால் மலர்கோதி வாவிதொறும் மேயுமோ**
**மேயாம லப்பால் விரையுமோ?—மாயன்**
**திருமோகூர் வாயின்று சேருமோ நாளை**
**வருமோ,கூர் வாயன்னம் வாழ்ந்து.**

| | | | |
|---|---|---|---|
| கூர் வாய் அன்னம் | கூர்மையுள்ள வாயையுடையதாய் [எனக்குத் தூது சென்றதான] அன்னப் பறவையானது | வாயால் மலர் கோதி | தனது வாயினால் மலர்களைக் கோதிக் கொண்டு |
| | | வாவி தொறும் | (வழியிலுள்ள) தடாகங்களிலெல்லாம் |

| | | | |
|---|---|---|---|
| மேயுமோ | மேய்ந்துகொண்டு போதைப்போக்குமோ? | மாயன் திருமோகூர் வாய் | எம்பெருமானது திருமோகூர்ப்பதியில் |
| மேயாமல் அப்பால் விரையுமோ | அவ்வாறு தன் காரியத்தில் கால் தாழாமல் உத்தேச்யமான விடத்திற்கு விரைந்து செல்லுமோ? | இன்று சேருமோ | இன்றைக்குச் சென்று சேருமோ? |
| | | வாழ்ந்து | மகிழ்ச்சி பெற்று |
| | | நாளை வருமோ | நாளைக்கு என்னிடம் திரும்பி வந்து சேருமோ? |

*** திருமோகூராத்தனோடு கலந்து பிரிந்த தலைவி அன்னத்தைத் தூது விட்டிருந்தாள்; அது மீண்டு வரத் தாழ்த்தவாறே தோழியோடு உசாவுகின்றாள் தலைவி; அன்னம் விரைந்து செல்லாது வழியிடையே தன்னுணவுகளிலே பராக்கடித்திருக்குமோ! அங்குப் போய்ச் சேர்ந்திருக்குமோ! இன்று வருமோ! நாளை வருமோ! என்று அலைபாய்ந்து பேசுகின்றாளாயிற்று. .... .... (46)

7. திருக்கூடல். (தென் மதுரை.)

**வாழ்விப்பா னெண்ணமோ வல்வினையி லின்னமென்னை**
**ஆழ்விப்பா னெண்ணமோ அஃதறியேன்—தாழ்விலாப்**
**பாடலழ கார்புதுவைப் பட்டர்பிரான் கொண்டாடும்**
**கூடலழ காநின் குறிப்பு. (47)**

| | | | |
|---|---|---|---|
| தாழ்வு இலா பாடல் அழகு ஆர் | உயர்ந்த பாசுரங்களினழகு பொருந்திய | என்னை வாழ்விப்பான் எண்ணமோ | என்னை உஜ்ஜீவிக்கச் செய்வதாகவோ? (அன்றி) |
| புதுவை பட்டர் பிரான் கொண்டாடும் | ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பெரியாழ்வார் கொண்டாடிய | இன்னம் | இத்தனை காலம்போல் இன்னமும் |
| | | வல் வினையில் | கொடிய இருவினைகளில் |
| கூடல் | தென்மதுரைப் பதியிலெழுந்தருளியுள்ள | ஆழ்விப்பான் எண்ணமோ | அழுந்தச் செய்வதாகவோ? |
| அழகா | ஸுந்தரராஜனே! | | |
| நின் குறிப்பு | உனது திருவுள்ளக் கருத்து | அஃது அறியேன் | அதனை அறிகின்றிலேன். |

8. ஸ்ரீவில்லிபுத்தூர்.

**குறித்தொருவர் கொண்டாடுங் கொள்கைத்தோ கோதை**
**நிறத்தவூர் விண்டுசித்தர் நீடூர்—பிறப்பிலியூர்**
**தாழ்வில்லி புத்தூரென் றைவர்க்குத் தானிரந்தான்**
**வாழ்வில்லி புத்தூர் வளம். (48)**

| | | | |
|---|---|---|---|
| கோதை நிறத்த ஊர் | ஆண்டாளால் சீர்மை பெற்ற வூராயும் | தான் இரந்தான் பிறப்பு இலி வாழ் ஊர் | இரப்பதற்கு ஏற்றவனல்லாத தான் இரந்தவனான அநாதிபுருஷன் வாழ்கின்ற ஊராயுமுள்ள |
| விண்டுசித்தர் நீடு ஊர் | பெரியாழ்வார் வாழ்ந்த பெரிய வூராயும் | | |
| புது ஊர் தாழ்வு இல் இ என்று | 'புதிய சில ஊர்களைத் தாமதியாமல் கொடு' என்று (துர்யோதநாதிகளை நோக்கி) | வில்லிபுத்தூர் | ஸ்ரீவில்லிபுத்தூரினுடைய |
| | | வளம் | செழிப்பானது |
| ஐவர்க்கு | பஞ்சபாண்டவர்களுக்காக | ஒருவர் குறித்து கொண்டாடும் கொள்கைத்தோ | ஒருவரால் நினைத்துப் பாராட்டத்தக்கதோ? [அன்று; அப்ரமேயம் என்கை.] |

*** மூன்றாமடியில் "தாழ்வில்லி" என்ற விடத்து 'தாழ்வு இல் இ' என்று பிரித்துப் பொருள் கொள்ளப்பட்டது. ஈ என்னும் ஏவலொருமை வினைமுற்று 'கொடுக்கக் கடவாய்' என்னும் பொருளுடையது ; அது இங்கு இ என்று குறுகியுள்ளது. கண்ணபிரான் பாண்டவ தூதனாய்ச் சென்ற காலத்துக் கௌரவர்களிடம் வேண்டின வரலாறு அறிக. * பொய்ச்சூதில் தோற்றபொறையுடை மன்னர்க்காய், பத்தூர் பெறாதன்று" (பெரியாழ்வார் திருமொழி 2-1-1) என்ற விடத்து எமது திவ்யார்த்த தீபிகை காண்க. .... .... ... .... (48)

9. திருக்குருகூர். (ஆழ்வார் திருநகரி.)

**வளந்தழைக்க வுண்டாலென் வாசமணந்தாலென்**
**தெளிந்தகலை கற்றாலென் சீசீ—குளிர்ந்தபொழில்**
**தண்குருகூர் வாவிச் சடகோப னூரெங்கள்**
**வண்குருகூ ரென்னாத வாய்.** (49)

| | | | |
|---|---|---|---|
| குளிர்ந்த பொழில் | 'குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த | என்னாத வாய் | என்று ஒருகாலேனுஞ் சொல்லாத வாயானது |
| குருகு ஊர் தண் வாவி | குருகென்னும் நீர்ப் பறவைகள் வாழப்பெற்றுக் குளிர்ந்த நீர்நிலைகளையுடைய | வளம் தழைக்க உண்டால் என் | வளமாக வுண்டால்தானென்ன ? |
| | | வாசம் மணந்தால் என் | சுகந்தப் பொருள்களையுண்டு பரிமளம் வீசினால்தானென்ன ? |
| சடகோபன் ஊர் | நம்மாழ்வாரவதரித்த தலம் | தெளிந்த கலை கற்றால் என் | நல்ல சாஸ்திரங்களையோதினால்தானென்ன ? |
| எங்கள் வண் குருகூர் | எங்கள் திருக்குருகூர்' | சீசீ | [ஒன்றினாலும் ஒரு பயனுமுண்டாகாது.] நிந்தைக்குறிப்பு. |

20. திருத்தொலைவில்லிமங்கலம். [இரட்டைத் திருப்பதி.]

**வாயு மனைவியர்பூ மங்கையர்க ளெம்பிராற்கு**
**ஆயுதங்க ளாழிமுதல் ஐம்படைகள்—தூய**
**தொலைவில்லி மங்கலமூர் தோள்புருவ மேனி**
**மலைவில் லிமங்கலந்த வான்.** (50)

| | | | |
|---|---|---|---|
| எம் பிராற்கு | எம்பெருமானுக்கு | தூய தொலைவில்லி மங்கலம் | பரிசுத்தமான தொலைவில்லி மங்கலமென்பதாம் ; |
| வாயும் மனைவியர் | பொருந்திய தேவிமார் | | |
| பூ மங்கையர்கள் | ஸ்ரீதேவியும் பூதேவியுமாவர் ; | தோள் புருவம் மேனி | திருத்தோள்களும் திருப்புருவமும் திருமேனி நிறமும் |
| ஆயுதங்கள் | படைக்கலங்களோவென்றால் | | |
| ஆழி முதல் ஐ படைகள் | சக்கரம் முதலான பஞ்சாயுதங்களாம் ; | மலை வில் இமம் கலந்த வான் | (முறையே) மலையும் வில்லும் குளிர்ச்சிபொருந்திய மேகமுமொக்கும். |
| ஊர் | திருப்பதியோவென்றால் | | |

*** பூமங்கையர் என்ற ஒரு சொல்லிலேயே ஸ்ரீதேவியும் பூதேவியும் பொருள்படுவர் ; பூவிலே தோன்றிய மங்கையென்று கொண்டால் ஸ்ரீதேவி ; இனி பூவென்பதை (பூ) என்னும் வட சொல் விகாரமாகக் கொண்டு பூவாகிய மங்கை யென்றால் பூமிப்பிராட்டி ; இஃது இரட்டுற மொழிதலெனப்படும். உபமேயங்களான தோள் புருவம் மேனியாகிய மூன்றையும் ஒரு சேரக் கூறி, உப

மானங்களான மலை வில் வான் ஆகிய மூன்றையும் ஒரு சேரக் கூறியுள்ளார்; முறைநிரனிறைப்பொருள்கோள்வகையில் முறையேஅந்வயித்துப் பொருள் காண்க.(50)

11. சிரீவரமங்கை—வானமாமலை.

**வானோர் முதலா மரமளவா வெப்பிறப்பும்**
**ஆனேற் கவதியிட லாகாதோ—தேனேயும்**
**பூவர மங்கை புவிமங்கை நாயகனே**
**சீவர மங்கையர சே. (51)**

| | | | |
|---|---|---|---|
| தேன் ஏயும் பூவர மங்கை | தேன் மலிந்த தாமரைப் பூவிலுள்ள சிறந்த மங்கையான பெரிய பிராட்டியார்க்கும் | மரம் அளவு ஆ | ஸ்தாவரஜன்மமீருகவுள்ள |
| புவி மங்கை | பூமிப்பிராட்டிக்கும் | எப் பிறப்பும் ஆனேற்கு | எல்லாப் பிறப்புகளுமெடுத்து வருந்திய எனக்கு |
| நாயகனே | கணவனான திருமாலே!, | | |
| சீவரமங்கை அரசே | வானமாமலைத் திருப்பதிக்குத் தலைவனே! | அவதி இடல் ஆகாதோ | இப்பிறப்புக்கு முடிவு இன்னநாளில் என்று அருளிச் செய்யலாகாதோ? |
| வானோர் முதல் ஆ | தேவஜன்மம் முதற்கொண்டு | | |

*** திருநாங்கூரைச் சுற்றிப் பதினொரு திருப்பதிகள் போல, ஆழ்வார் திருநகரியைச் சுற்றி ஒன்பது திருப்பதிகள் ப்ரஸித்தம். சோழநாட்டுத் திருப்பதிகளைப் பாடினபோது கீழே திருநாங்கூர்த்திருப்பதிகள் பதினொன்றையும் வரிசையாகப் பாடியுள்ளார். அங்ஙனமே இங்கும் பாடவேண்டியிருக்க, இந்த நவ திருப்பதிகளுள் சேராத வானமாமலையையும் திருக்குறுங்குடியையும் இவற்றினிடையே சேர்த்துப் பாடுகின்றார்; இதற்குக் காரணம் யாதோ வென்று ஆலோசித்த நமக்குத் தோன்றியது இது; திருநாங்கூர்ப்பதிகள் பதினொன்றையும் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் வரிசையாகப் பாடினபடியாலே அதற்குச் சேர இவரும் வரிசையாகவே பாடிப் போந்தார்; நம்மாழ்வார் நவதிருப்பதிகளை அங்ஙனம் வரிசையாகப் பாடிற்றிலர். ஆகவே இவரும் வரிசையாகப் பாடாது கலந்து பாடுகின்றார் போலுமென்று தோன்றிற்று. .... .... .... .... (51)

12. தென்திருப்பேரை.

**அரைசாகி வையமுழு தாண்டாலு மின்பக்**
**கரைசார மாட்டார்கள் கண்டீர்—முரைசாருந்**
**தென்திருப்பே ரைப்பதியான் சீர்கேட்டு நாவிலவன்**
**தன்திருப்பே ரைப்பதியா தார், (52)**

| | | | |
|---|---|---|---|
| முரைசு ஆரும் | முரஜவாத்தியம் முழங்கப்பெற்ற | நாவில் பதியாதார் | தமது நாக்கினில் திருத்தமாக உச்சரியாதவர்கள் |
| தென்திருப்பேரை பதியான் | தென்திருப்பேரையென்னும் தலத்திலுறையும் பெருமானுடைய | அரைசு ஆகி | ஒரு நாயகமாய் |
| சீர் | சிறப்பை | வையம் முழுது ஆண்டாலும் | நிலவுலகம் முழுவதையும் அரசாளப்பெற்றாலும் |
| கேட்டு | காதினால் கேட்டு | | |
| அவன் தன் திருப்பேரை | அப்பெருமானுடைய மகரநெடுங்குழைக் காதனென்னுந் திருநாமத்தை | இன்பம் கரை சார மாட்டார்கள் | பேரின்பக் கரையாகிய முத்திநிலத்தை அடைய மாட்டார்கள். |

***இம்மையில் பெருஞ்செல்வம் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்தாலும் அது இம்மையிலேயே யொழிந்திடுவதன்றி அதனுல் மறுமையில் யாதொரு நற்பயனும் கைகூடாதென்பது இப்பாட்டின் உட்கருத்து. அரைசு, முரைசு—இடைப்போலி; எதுகை நோக்கி வந்தது. முரஜமென்னும் வடசொல் முரசெனத்திரிந்தது; மங்கல வாத்தியங்களெல்லாவற்றையும் கொள்ளலாமிங்கு. இத்திருப்பதியின் ப்ரிபூர்த்தியான திருநாமம் ‘திருப்பேரெயில்’ என்பதாம். இத்திருநாமத்தில் ஏகதேசங் கொண்டு ‘திருப்பேரை’ எனவழங்கப்பட்டு வருகின்றது. திருவாய்மொழியில் (7-3) * வெள்ளைச் சுரிசங்கு பதிகத்தின் முதற்பாட்டின் எமது திவ்யார்த்த தீபிகையுரையில் இதைப்பற்றின விரிவு காண்க. .... .... .... .... .... (52)

## 13. திருவைகுந்தம்-ஸ்ரீவைகுண்டம்.

(பெண்ணிலைமையெய்திப் பாடும் பாசுரம்,)

தாருடுத்துத் தூசு தலைக்கணியும் பேதையிவள்
நேருடுத்த சிந்தை நிலையறியேன்—போருடுத்த
பாவைகுந்தம் பண்டொசித்தான் பச்சைத் துழாய்நாடும்
சீவைகுந்தம் பாடும் தெளிந்து. (53)

| | | | |
|---|---|---|---|
| தார் உடுத்து | தலையில் அணிந்து கொள்ளவேண்டிய பூமாலையை அரையில் உடுத்துக்கொண்டு | பண்டு | முன்பு [ஸ்ரீராமாவதாரத்தில்] |
| தூசு தலைக்கு அணியும் | அரையில் உடுக்கவேண்டிய ஆடையை முடிமீது அணிந்துகொள்கின்ற | ஒசித்தான் | தனது வில்லம்பை ஏவி முறித்த பெருமானுடைய |
| பேதை இவள் | இந்த இளம்பெண்ணனவள் | பச்சை துழாய் | பசுமைதங்கிய திருத்துழாய் மாலையை |
| தெளிந்து | மனத்தெளிவுகொண்டு | நாடும் | விரும்புவாள் ; |
| போர் உடுத்த பாவை | யுத்தத்திற்குச் சித்தமாய் நின்றபெண்ணாகிய தாடகையானவள் | சீவைகுந்தம் பாடும் | ஸ்ரீவைகுண்டத் திருப்பதியைப் பாடுகின்ருள்; |
| குந்தம் | தன்மீது எறிந்த சூலாயுதத்தை | நேர் உடுத்த சிந்தை நிலை அறியேன் | ருஜுவாகச் சென்றுகொண்டிருந்த இவளது மனம் இவ்வாறு மாறிய நிலையைப்பற்றி யான் அடியறியேன். |

*** “அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து” என்று நம்மாழ்வாருளிச் செய்தபடியே மிக்க இளமையிலேயே பகவத்விஷயத்தில் அவகாஹனம் சிலவ்யக்தி விசேஷங்களுக்கே உண்டாகும்; அத்தகைய அவகாஹனம் தமக்கு உண்டாயிருக்கிறபடியை ஐயங்கார் தாம் அந்யாபதேசத்தாலே பேசுகிறபடி இது. * முலையோ முழுமுற்றும் போந்தில * என்கிற திருவிருத்தப்பாசுரமும் * ஐயபுழுதியுடம்பளைந்து * என்கிற பெரியாழ்வார் பதிகமும் போல இச் செய்யுள் தாய் பாசுரமாக அமைந்தது. பொதுவாகப் பெண்ணைச் சொல்லும் பாவை என்னுஞ் சொல் இங்கு (மூன்றாமடியில்) சந்தர்ப்பம் நோக்கித் தாடகையைச் சொல்லிற்று. குந்தம்—வடசொல். .... .... .... ... ... (53)

## 14. திருப்புளிங்குடி.

(இதுவும் பெண்மையிற் பேசும் பாசுரம்.)

தெளியும் பசும்பொற் சிறைக்காற்று வீச
விளியுந் துயர்போய் விடுமே—எளியேற்கு
அருளப் புளிங்குடிவா ழச்சுதனைக் கொண்டு
கருளப்பு ளிங்குவந்தக் கால். (54)

| | |
|---|---|
| எளியேற்கு | ஏழையேனுகிய எனக்கு |
| அருள | அருள் செய்யுமாறு |
| புளிங்குடி வாழ் | திருப்புளிங்குடிப்பதியில் வாழ்கின்ற |
| அச்சுதனை | எம்பெருமானை |
| கொண்டு | எழுந்தருளப் பண்ணிக் கொண்டு |
| கருளப் புள் | கருத்மானுகிற பக்ஷி ராஜன் |
| இங்கு வந்தக் கால் | என்னருகே வரப்பெற்ருல் |

| | |
|---|---|
| | (அப்போது) |
| தெளியும் பசும பொன் | தெளிந்த பசும்பொன் மயமான |
| சிறை | (அப்பக்ஷிராஜனுடைய) சிறகினின்று |
| காற்று வீச | காற்று வீசுதலாலே |
| விளியும் துயர் போய் விடும் | மரணதசையென்னலாம்படியான (இப்போதைய) துக்கம் தொலைந்திடும். |

* * * காதலனைப் பிரிந்து வருந்துகின்ற காதலி 'இப்பொழுதே எம்பெருமான் கருடாரூடனுக வந்து என்னைச் சார்ந்தால்,நான் எனது பரிதாபநிலை நீங்கும் என்று சொல்லுவதாக இப்பாட்டு அமைக்கப்பட்டது. இத்திருப்பதியைப் பாடுகின்ற நம்மாழ்வார் "பளிங்கு நீர்முகிலின் பவளம்போல் கனிவாய் சிவப்ப நீ காண வாராயே" என்பது முதலிய பாசுரங்களிலும் எம்பெருமானைத் தம்மிடம் வருமாறு கோரியிருப்பது இங்கே நினைக்கத் தக்கது. .... .... .... .... (54)

### 15. வரகுணமங்கை.

(இதுவும் பெண்மையிற் பாசுரம்)

காலமும் நோயுங் கருதாத வன்னைமீர்
வேலன் வெறியை விலக்குமின்கள்—மாலாம்
வரகுண மங்கையன்தாள் வண்டுழாய் மேலா
தரகுண மங்கை தனக்கு. (55)

| | |
|---|---|
| காலமும் | இப் பெண்பிள்ளையின் பருவத்தையும் |
| நோயும் | இவளுக்கிப்போது நேர்ந்துள்ள நோயின் தன்மையையும் |
| கருதாத | ஆராய்ந்து உண்மையறிய மாட்டாத |
| அன்னைமீர் | தாய்மார்களே ! |
| மங்கை தனக்கு | உங்கள் பெண்ணுக்கு, |

| | |
|---|---|
| மால் ஆம் வரகுண மங்கையன் தாள் | திருமாலாகிய வரகுணமங்கைத்திருப்பதியெம்பிரானது திருவடிகளில் சாத்தின |
| வள் துழாய்மேல் | திருத்துழாயின் மீது |
| ஆதர குணம் | ஆசையாகிய குணமுள்ளது; |
| | (ஆதலால்) |
| வேலன் வெறியை விலக்குமின்கள் | வேலனுடைய வெறியாடுதல் இங்கு நிகழாதபடி விலக்கிவிடுங்கள். |

* * * திருவிருத்தத்தில் * சின்மொழி நோயோ கழிபெருந் தெய்வம் * என்கிற பாசுரத்தையும், திருவாய்மொழியில் * தீர்ப்பாரையாமினி * என்னும் பதிகத்தையும் பின்பற்றிப் பேசிய பாசுரமிது. தலைவிக்குத் தலைவனது பிரிவினுலுண்டான நோயின் வைலக்ஷண்யத்தை யறியாத தாய்மார்கள் தேவதாந்தர ஸ்பரிசத்தினுலுண்டான நோயிது என்று மயங்கி விபரீத முறையில் பரிஹாரம் நடத்தப்பார்க்க, உண்மைக் காரண முணர்ந்த தோழி அதனை விலக்குவதாக வைத்துப் பேசியது இது.

### 16. திருக்குளந்தை—பெருங்குளம்.

தனக்குடலம் வேருன தன்மை யுணரான்
மனக்கவலை தீர்ந்துய்ய மாட்டான்—நினைக்கில்
திருக்குளந்தை யாருரைத்த சீர்க்கீதை பாடுந்
தருக்குளந்தை யாமலிருந் தால். (56)

| | | | |
|---|---|---|---|
| நினைக்கில் | ஆராய்ந்து பார்க்குமளவில் | உளம் தையாமலிருந்தால் | ஒருவனது மனத்தில் பதியாமலிருந்தால் (அவன்) |
| திருக்குளந்தையார் உரைத்த | இருக்குளந்தையெம்பெருமான் (கீதாசார்யனாயிருந்து) அருளிச்செய்த | தனக்கு உடலம் வேறு ஆன தன்மை உணரான் | தேஹாத்ம ப்ரமம் நீங்கப் பெறமாட்டான்; |
| சீர் கீதை | சிறந்த கீதா சாஸ்த்ரத்தை | மனம் கவலை தீர்ந்து உய்ய மாட்டான் | ஸாம்ஸாரிகங்களான மனோ வேதனைகள் நீங்கி உஜ்ஜீவிக்கவும் பெறமாட்டான். |
| பாடும் தருக்கு | படிப்பதனாலுண்டாகிய மனக்களிப்பு | | |

* * * "அறிவினுற் குறைவில்லா அகன்ஞாலத்தவரறிய நெறியெல்லா மெடுத்துரைத்த நிறைஞானத் தொருமூர்த்தி" என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடி ஸகலார்த்தங்களையும் விளக்கத் தோன்றிய கீதாசாஸ்த்ரத்தை யருளிச்செய்தவர் திருக்குளந்தைப் பெருமாளென்று இப்பாட்டில் காட்டியிருப்பது தர்மியின் ஐக்கியத்தைப்பற்ற. அந்த கீதையின் பொருளை யறியப்பெறாதார்க்கு உஜ்ஜீவனமில்லையென்றதாயிற்று. .... .... .... .... .... .... (56)

## 17. திருக்குறுங்குடி.

தாலத் திழிகுலத்துச் சண்டாள மானாலும்
மேலத் தவரதனின் மேன்மைத்தே—கோலக்
குறுங்குடிவாழ் மாயன் குரைகழற்கா ளாகப்
பெறுங்குடியாய் வாழ்வார் பிறப்பு. (57)

| | | | |
|---|---|---|---|
| கோலம் குறுங்குடி வாழ் மாயன் | அழகிய திருக்குறுங்குடிப் பதியில் வாழ்கின்ற பெருமானுடைய | பிறப்பு | ஜன்மமானது |
| | | தாலத்து | இந்நிலவுலகத்தில் |
| குரை கழற்கு | ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளுக்கு | இழி குலத்து | தாழ்ந்த சாதியைச் சேர்ந்த |
| | | சண்டாளம் ஆனாலும் | சண்டாள ஜாதியிலானாலும் |
| ஆள் ஆக பெறும குடி ஆய் | அடிமையாகப் பெறுகின்ற குலத்திற் பொருந்துபவராய் | மேல் அத்தவர் அதனின் | உயர்குடிப் பிறப்பையுடைய அந்த முனிவர்களின் பிறவியைக் காட்டிலும் |
| வாழ்வார் | வாழ்கின்றவர்களினுடைய | மேன்மைத்து | சிறப்புடையதாகும். |

* * * உலகப் பிரசித்தமான நம்பாடுவான் சரித்திரம் இத்திவ்விய தேசத்தோடு தொடர்புடையதாதலால் இந்தச் செய்யுள் இங்ஙனே அமைந்தது மிகப் பொருத்தம். தலம் என்ற வடசொல் தாலமென நீண்டது; பூதலமென்கை. .... .... (57)

## 18. திருக்கோளூர்.

பிறப்பற்று மூப்புப் பிணியற்று நாளும்
இறப்பற்று வாழ விருப்பீர்—புறப்பற்றுத்
தள்ளுங்கோ ளூரரவில் தாமோ தரன்பள்ளி
கொளளுங்கோ ளூர்மருவுங் கோள். (58)

| | | | |
|---|---|---|---|
| பிறப்பு அற்று | மேன்மேலும் பிறப்பது ஒழிந்து | இறப்பு அற்று | அவற்றோடு அநுபந்தியான மரணமும் நீங்கி |
| மூப்பு பிணி அற்று | கிழத்தனமும் வியாதியும் அடுத்தடுத்து வருவது நீங்கி | நாளும் வாழ | (ஸம்ஸார ஸம்பந்தமின்றியே) எப்போதும் முக்தர்களாய் வாழும்படி |

| | | | |
|---|---|---|---|
| இருப்பீர் | ஆசைகொண்டிருப்பவர்களே !, (நீங்கள்) | பள்ளி கொள்ளும் | சயனித்தருளாநின்ற |
| புறம் பற்று தள்ளுங்கோள் | மமகாரத்தை யொழியுங்கள் ; | தாமோதரன் | ஸர்வேச்வரனுடைய தான |
| ஊர் அரவில் | (உரகமாகையாலே) ஊர்ந்து செல்லும் ஸர்ப்ப ஜாதியிற் சேர்ந்த திருவனந்தாழ்வான் மீது | கோளூர் | திருக்கோளூர்ப்பதியை |
| | | மருவுங்கோள் | சென்று சேருங்கள். |

— பாண்டி நாட்டுத் திருப்பதிகள் முற்றுப்பெற்றன. —



## பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டுக்கும் ஆழ்வார் பாடல் குறிப்பு.

41. திருமாலிருஞ்சோலை (ஐவர்பாடல்.) பூதத்தாழ்வார். 48. * உணர்ந்தாய் மறை நான்கும்....மாயிருஞ்சோலைமலை. * 54. * வெற்பென றிருஞ்சோலை. * நம்மாழ்வார். திருவாய். 2—10. * கிளரொளியிளமை - பதிகம். 3—1. * முடிச்சோதியாய் - பதிகம். (இப்பதிகத்தில் திருமாலிருஞ்சோலை யென்கிற சொல் இல்லையாயினும் இப்பதிகத்திற்கான நூற்றந்தாதி பாசுரத்தில் * அடிவாரந்தன்னிலழகர் வடிவழகைப் பற்றி.......முற்று மனுபவித்தான் முன் * என்று மணவாளமாமுனிகளருளிச் செய்திருப்பதும் அதற்கு மூலமாக முன்னே ரருளிச் செய்திருப்பது முணர்க.) 10—7. * செஞ்சொற்கவிகாள் - பதிகம். 10—8—1. * திருமாலிருஞ் சோலைமலையென்றேன் * 10—8—6 * திருப்பேர்நகரான் திருமாலிருஞ் * பெரியாழ்வார், திருமொ. 1—5—8. *உன்னையு மொக்கலையில்......சோலைமலைக்கரசே * 3—4—5. * சுற்றிநின்றுயர்....... மாலிருஞ்சோலை யெம்மாயற்கு * 4—2. * அலம்பா வெருட்டா - பதிகம் 4—3. * உருப்பிணி நங்கைதன்னை - பதிகம். 5—3. *துக்கச் சுழலையை - பதிகம். ஆண்டாள். நா - தி. 4—1. * தெள்ளியார் பலர்...மாலிருஞ்சோலை மணாளனார். * 9. * சிந்துரச் செம்பொடி - பதிகம்.



திருமங்கையாழ்வார். பெ - தி. 1—8—5. * வண்கையான் - இருஞ்சோலைமேவிய வெம்பிரான். 2—7—7. * உளங்கனிந்........மாலிருஞ்சோலைமாயனே * 4—9—2. * சிந்தைதன்னுள்....சோலை மழகளிறே. * 7—3—6. * எட்டனைப்....திருமாலிருஞ் சோலையங்கட்டியை. 7—9—7 * சேயோங்குதண் திருமாலிருஞ் * 9—2—8. * மஞ்சுயர் மாமதிதீண்ட நீண்ட மாலிருஞ் * 9—8. * முந்துறவுரைக்கேன் பதிகம். 9—9. * மூவரில் முன் பதிகம். 10—1—8. * பத்தராவியை—மாலிருஞ்சோலைத் தொழுது. * 11—2—8. * மஞ்சுசு மாலிருஞ் * 11—7—9. * தேனொடு வண்டாலுந்திருமாலிருஞ் * திருக்குறுந். * பாயிரும்பரவை - மாயிருஞ்சோலை மேய. சிறியமடல் * சீரார் மாலிருஞ்சோலை. * பெரியமடல் * தென்னனுயர் பொருப்பும் * மன்னனை மாலிருஞ் * திருநெடுந். 10. * பொன்னைய்—தென்னைய் *

42. திருக்கோட்டியூர். (ஐவர் பாடல்.) பூதத்தார். 46. * பயின்றதரங்கம் திருக்கோட்டி. * 87. இன்றுவறிகின்...திருக்கோட்டியெந்தை திறம். * பேயார். 62. * விண்ணகரம்...தென்கோட்டி. * திருமழிசை. நான்மு. 34. * குறிப்பெனக்குக் கோட்டியூர் * பெரியாழ்வார். திருப்பல். 11. * அல்வழக்கொன்று மில்லாவணி கோட்டி. * திருமொ. 1—1—1. * வண்ணமா...கோட்டியூர். 1—1—10. * செங்நெ....

கோட்டியூர். 2—6—2. * கொங்குங்குடந்தையுங் கோட்டி * 4—4. * காவகாரியம் பதிகம். திருமங்கை. பெ. தி. 7—1—3. * தாரேன்...திருக்கோட்டியூரே. 9—10. * எங்களெம்மிறை பதிகம். 10—1—9 * கம்பமா...கோட்டியூர்க்கண்டு. * பெரியமடல். * கோட்டியூரன்ன வுருவினரியை* .

43. திருமெய்யம். (ஒருவர்பாடல்.) திருமங்கை. பெ. தி. 2—5—8. * பெண்ணுகி...மெய்யமென்னும் * 3—6—9. * மிலையாளாநின்...திருமெய்யமலையாளா * 5—5—2. * கலையாளா....மெய்யமலையாளன். * 6—8—7. * கட்டேறு நீள்...மெய்யமமர்ந்த * 8—2—3. * அருவிசோர்....மெய்யம் வினவி. * 9—2—3. * வேயிருஞ்....மெய்யமணாளர். * 10—1—5. * சுடலையில்....மெய்யத்துள்ளே. * 11—7—5. * மையார்கடலும்....மெய்யமலையானை. * திருக்குறுந். 19. * பிண்டியார்....அரங்கம் மெய்யம். * பெரியமடல் * திருமெய்யத்தின்னமுத வெள்ளத்தை *

44. திருப்புல்லாணி. (ஒருவர்பாடல்.) திருமங்கை. 9—3. தன்னை நைவிக்கிலென் - பதிகம். 9—4 * காவார்மடல் பதிகம். பெரியமடல். * புல்லாணித் தென்னன் *

45. திருத்தண்கால். (இருவர்பாடல்.) பூதத்தார். 70. * தமருள்ளம்....தண்கால் * பெ. தி. 5—6—2. * போரானை...திருத்தண்காலூரானை. * சிறியமடல் * பேராலிதண்கால். * பெரியமடல் * தண்கால் திறல்வலியை. * திருநெடுந். 17. * பொங்கார்...ஆங்கே தண்காலும். *

46. திருமோகூர். (இருவர்பாடல்.) நம்மாழ்வார். திருவாய். 10—1. * தாளதாமரை பதிகம். திருமங்கை. சிறியமடல். * சீராரும்மாலிருஞ்சோலை திருமோகூர். *

47. திருக்கூடல். [தென்மதுரை.] (ஒருவர்பாடல்.) திருமங்கை. பெ. தி. 9-2-5 * கோழியுங் கூடலும். *

48. ஸ்ரீவில்லிபுத்தூர். (இருவர்பாடல்.) பெரியாழ்வார் 2-2-6. * மின்னனைய... இன்னிசைக்கும் வில்லிபுத்தூர். * ஆண்டாள். நா. தி. 5—5. * மென்னடையன்னம்...வில்லிபுத்தூ ருறைவான்றன். *

49. திருக்குருகூர். (ஒருவர்பாடல்.) நம்மாழ். திருவாய். 4—10. * ஒன்றுந்தேவு பதிகம்.

50. தொலைவில்லிமங்கலம். (ஒருவர்பாடல்.) நம்மாழ். 6—5 * துவளில் பதிகம்.

51. சீரிவரமங்கை. (ஒருவர்பாடல்.) திருவாய். 5—7. * நோற்றநோன்புபதிகம்.

52. தென்திருப்பேரெயில். (ஒருவர்பாடல்.) திருவாய். 7—3. *வெள்ளைச்சுரிபதிகம்.

53. ஸ்ரீ வைகுண்டம். (ஒருவர்பாடல்.) திருவாய். 9—2—4. புளிங்குடிக் கிடந்து ...வைகுந்தத்துள் நின்று. * 9—2—8. * எங்கள்கண்...திருவைகுந்தத்துள்ளாய் *.

54. திருப்புளிங்குடி. (ஒருவர்பாடல்.) திருவாய். 8—3—5. * கொடியார்மாட... புளிங்குடியும். * 9—2. * பண்டைநாளாலே பதிகம்.

55. வரகுணமங்கை. (ஒருவர்பாடல்.) திருவாய். 9—2—4. புளிங்...வரகுணமங்கையிருந்து.

56. திருக்குளந்தை. (பெருங்குளம்.) (ஒருவர்பாடல்.) திருவாய். 8—2—4. * கூடச்சென்றேன்...மாடக் கொடிமதிள் தென்குளந்தை. *

57. திருக்குறுங்குடி. (நால்வர் பாடல்.) திருமழிசை. திருச்சந். 62. * கரண்ட மாடு...குறுங்குடி நெடுந்தகாய் * நம்மாழ்வார். திருவாய். 1—10=9. * நம்பியைத் தென்குறுங்குடி. * 3—9—2. * உளனாகவே...குறுங்குடி மெய்ம்மையே. * 5—5. * எங்ஙனேயோபதிகம். பெரியாழ்வார். 1—5—8. * உன்னையும்...மன்னு குறுங்குடியாய். * திருமங்கை. பெ. தி. 1—6—8. * ஏவினர்...குறுங்குடி நெடுங் * 5—6—2. * பேரானைக் குறுங்குடி. * 6—3—3. * மானேய்நோக்கு நல்லார்...கோனேகுறுங்குடியுள் * 9—5. * தவளவிளம் பதிகம். 9—6. * அக்கும்புலி பதிகம். பெரியமடல்—*தென்னன் குறுங்குடியுள். * திருநெடுந். 14. முளைக்கதிரைக் குறுங்குடியுள்முகிலை.*

58. திருக்கோளூர். (ஒருவர்பாடல்.) திருவாய். 6—7.* உண்ணுஞ்சோறுபதிகம். 3—3—5. * கொடியார்மாடக் கோளூரகத்தும். * ... .... .... *

பாண்டிநாட்டுத் திருப்பதிகளின் பாடல் குறிப்பு முற்றிற்று.

---

## மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்று.

### 1. திருவனந்தபுரம்.

கோளார் பொறியைந்துங் குன்றியுட லம்பழுத்து
மாளாமுன் நெஞ்சே வணங்குதியால்—கேளார்
சினந்தபுரஞ் சுட்டான் திசைமுகத்தான் போற்றும்
அனந்தபுரஞ் சேர்ந்தா னடி. (59)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | எனது மனமே ! | திசைமுகத்தான் | நான்முகனும் |
| கோள் ஆர் பொறி ஐந்தும் | (கண்ட வழிகளிலும்) இழுத்துச் செல்லுந் தன்மை பொருந்திய பஞ்சேந்திரியங்களும் | போற்றும் | துதித்து வணங்கப் பெற்ற |
| குன்றி | வலிமையொடுங்கி | அனந்தபுரம் சேர்ந்தான் அடி | திருவனந்தபுரத் தெம் பெருமானுடைய திருவடிகளை |
| உடலம் | உடம்பானது | வணங்குதி | வணங்குவாயாக. ஆல் - அசை). |
| பழுத்து | (ஐரையினால்) தளர்ச்சியையடைந்து | | |
| மாளா முன் | இறப்பதற்கு முன்னே | | |
| கேளார் சினந்த புரம் சுட்டான் | பகைவர்களாகிய அசுரர்கள் கோபித்து எதிரிடுவதற்கு இடமாயிருந்த திரிபுரங்களை நெற்றிக் கண்ணினால் எரித்தொழித்தவனை சிவனும் | | |

*** மும்மூர்த்திகளில் மற்றையிரு மூர்த்திகளாலும் வணங்கப்பெற்ற அனந்த பத்மநாபனை மூப்பு முதிர்ந்து இறப்பு நேருவதற்கு முன்னே வணங்குக வென்று நெஞ்சுபோல்வாரான தொண்டர்களை நோக்கிக் கூறியவாறு .... (59)

### 2. திருவண்பரிசாரம்.

(பெண்ணிலைமை யெய்திப் பாடும் பாடல்.)

அடியுங் குளிர்ந்தாள் அறிவுங் குலைந்தாள்
முடிகின்றாள் மூச்சடங்கு முன்னே—கடிதோடிப்
பெண்பரிசா ரங்குப் பிறப்பித்து மீளுவார்
வண்பரிசா ரங்கிடந்த மாற்கு. (60)

| | | | |
|---|---|---|---|
| அடியும் குளிர்ந்தாள் | (இவள்) கால்களும் குளிரப்பெற்று | வண் பரிசாரம் கிடந்த மாற்கு | திருவண்பரிசாரத்தி லெழுந்தருளியுள்ள திருமாலிடத்தில் |
| அறிவும் குலைந்தாள் | அறிவும் அழியப்பெற்று | கடிது ஓடி | விரைந்து சென்று |
| | | அங்கு | அவ்விடத்து |
| முடிகின்றாள் | முமூர்ஷுவாயுமிருக்கின்றாள்; | பெண் பரிசு | இப்பெண்ணின் தன்மையை |
| மூச்சு அடங்கும் முன்னே | இவள் உயிரோடிருக்கையில் | பிறப்பித்து | தெரிவித்து |
| | | மீளுவார் ஆர் | திரும்பவல்லார் யாரோ? |

*** நாயகனோடு கூடிப் பிரிந்த நாயகி பிரிவாற்றாமையிற் படுகின்ற பெருந்துயரத்தைக் கண்டு ஆற்றமாட்டாத தாயானவள், தன்னாற்றாமைமிகுதியால் 'இவளது நிலைமையை நாயகனிடஞ் சென்று தெரிவித்துவரக் கூடிய தூதுவர் இல்லையே' என்று சொல்லி வருந்தும் பாசுரமிது. திருவண்பரிசாரத் தெம்பெருமான் வீற்றிருந்த திருக்கோலங் கொண்டவனென்பதை *வருவார் செல்வார் வண்பரிசாரத்திருந்த என் திருவாழ் மார்பற்கு* என்கிற திருவாய்மொழிப் பாசுர முணர்த்தும்; ஆகவே இங்கு ஈற்றடியில் கிடந்த என்பதற்கு பள்ளி கொண்டிருக்கின்றவென்று பொருள் கொள்ளுதல் பொருந்தாது. .... .... .... (60)

3. திருக்காட்கரை,

**மார்க்கமும் தாந்தாம் வழிபடுந் தெய்வமும்**
**ஏற்க வுரைப்பார்சொ லெண்ணாதே—தோற்குரம்பை**
**நாட்கரையா முன்னமே நன்னெஞ்சே நாரணனாங்**
**காட்கரையாற் காளாகாய் காண். (61)**

| | | | |
|---|---|---|---|
| நல் நெஞ்சே | எனது நல்ல மனமே! | சொல் எண்ணாது | பேச்சுக்களைப் பேணாமல் |
| தாம் தாம் | (உலகிலுள்ள) அவரவர்கள் | | |
| வழிபடும் மார்க்கமும் | எம்பெருமானை யடைவதற்கு ஸாதனமாகக் கொள்ளும் வழிகளும் | தோல் குரம்பை நாள் கரையா முன்னமே | தோலினால் வேய்ந்த குடிசைபோன்றஉடம்பின் வாழ்நாள் கழிவதற்கு முன்னமே[இறப்பதற்குள்ளே] |
| (தாம் தாம் வழிபடும்) தெய்வமும் | அவரவர்கள் வணங்குகின்ற தெய்வங்களும் (ஆகிய இவற்றிற்கு) | நாரணன் ஆம் காட்கரையாற்கு | திருக்காட்கரைப் பதியிலுள்ள ஸ்ரீமந்நாராயணனுக்கு |
| ஏற்க உரைப்பார் | பொருந்துமாறு வலியுறுத்திப் பேசுகின்ற புறமதத்தவர்களினுடைய | ஆள் ஆகாய் | அடிமைப்படுவாயாக. |

*** திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் "பிச்சச்சிறுபீலிச் சமண்குண்டர் முதலாயோர் விச்சைக்கிறையென்னுமவ் விறையைப் பணியாதே" என்றும் "வெள்ளியார் பிண்டியார் போதியாரென்றிவரோதுகின்ற கள்ளநூல் தன்னையுங் கருமமன்றென்றுய்ய" என்று மருளிச் செய்துள்ளவற்றைப் பின்பற்றிப் பேசிய பாசுரமிது. .... .... .... .... .... (61)

4. திருமூழிக்களம்

**காண்கின்ற வைம்பூதங் கட்கு மிருசுடர்க்கும்**
**சேண்கலந்த விந்திரற்குந் தேவர்க்கும்—மாண்கரிய**
**பாழிக் களத்தாற்கும் பங்கயத்து நான்முகற்கும்**
**மூழிக் களத்தான் முதல். (62)**

| | | | |
|---|---|---|---|
| காண்கின்ற ஐம் பூதங்கட்கும் | கண்ணுக்குப் புலப்படுகின்ற பஞ்ச பூதங்களுக்கும் | மாலகரிய பாழிகளத்தாற்கும் | மாட்சிமையுடையவரும் கறுத்த பெரிய கழுத்தை யுடையவருமான சிவபெருமானுக்கும் |
| இரு சுடர்க்கும் | ஸூரிய சந்திரர்களுக்கும் | பங்கயத்து நான்முகற்கும் | கமலாஸனனை பிரமனுக்கும் |
| சேண் கலந்த இந்திரற்கும் | வானுலகத்தில் வாழ்கின்ற தேவேந்திரனுக்கும் | மூழிக்களத்தான் | திருமூழிக்களத்தெம்பெருமானே |
| தேவர்க்கும் | மற்றைத் தேவர்களுக்கும் | முதல் | மூலகாரணமாவான். |

*** மண் முதல் பிரமனீறாகவுள்ள எல்லாப் பொருள்களையும் படைத்த முதற் கடவுள் திருமாலே; அவனுறையும் திருப்பதி திருமூழிக்களம்—என்றாயிற்று. (62)

## 5. திருப்புலியூர்.

(பெண்ணிலைமை யெய்திப் பேசும் பாசுரம்)

**முதல்வண்ண மாமே முலைவண்ண முன்னே**
**விதிவண்ண நீங்கி விடுமே—சதுரத்**
**திருப்புலியூர் நின்றான் திருத்தண்டு ழாயின்**
**மருப்புலியூர் தென்றல் வரின். (63)**

| | | | |
|---|---|---|---|
| சதுரம் திருப் புலியூர் நின்றான் | அழகிய குட்ட நாட்டுத் திருப்புலியூரில் நின்ற மாயப்பிரானுடைய | வரின் | இங்கே வந்து வீசுமாயின் (அப்பொழுது, எனக்கு) |
| திரு தண் துழாயின் | குளிர்ந்த திருத்துழாய் மாலையினுடைய | முலை வண்ணம் | தனத்தின் நிறம் (விரஹத்தினாலுண்டான வைவர்ணியம் மாறி) |
| மரு | பரிமளத்தை | முதல் வண்ணம் ஆம் | முன்னைய நிறமே வந்து சேரும்; |
| பு(ல்)லி | அளைந்துகொண்டு | முன்னே விதி வண்ணம் | பூர்வஜன்ம பாப பலனாக நேர்ந்த பிரிவுத்துயர் முழுவதும் |
| ஊர் | உலாவுந்தன்மையை யுடைய | | |
| தென்றல் | தென்றல் காற்றானது | நீங்கி விடும் | தொலைந்து போம். |

*** காதலி தனது நிலைமையை அன்புடைத் தோழியர்க்கு வெளிப்படையாக உரைத்ததிது. * கெண்டை யொண்கணும் துயிலும், என்னிறம் பண்டு பண்டு போலொக்கும், மிக்கசீர்த் தொண்டரிட்ட பூந்துளவின் வாசமே, வண்டு கொண்டு வந்தூதுமாகிலே * என்ற பெரிய திருமொழிப்பாசுரத்தின் போக்கை ஒருபுடையொத்தது. இத்திருப்புலியூர்ப்பதியை நம்மாழ்வார் அநுபவிக்கையில் தமது நிலைமையைத் தோழிமார் அன்னையர்க்கு உரைப்பதாக வைத்துப் பதிகம் பாடினர்; ஐயங்கார் தம் நிலைமையைத் தாமே தோழிக்கு உரைப்பதாக வைத்துப் பாடினராயிற்று. ... .... ... ... ... ... (63)

## 6. திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றாறு.

**வரவேண்டுங் கண்டாய் மதிகலங்கி விக்குள்**
**போர்வே உயிர்மாயும் போழ்து—பரமேட்டி**
**செங்குன்றூர் மாலே சிறைப்பறவை மேற்கனகப்**
**பைங்குன்றூர் கார்போற் பறந்து. (64)**

| | | | |
|---|---|---|---|
| பரமேட்டி! | பரமபதத்தில் வீற்றிருப்பவனே! | சிறை பறவை மேல் | இறகுகளைக் கொண்ட பெரிய திருவடியின் மீது |
| திருச்செங்குன்றூர் மாலே | திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாற்றெம் பெருமானே! | பைங் கனகம் குன்று ஊர் கார் போல் | பசும் பொன்மயமான மலையின் மேலேறி வருகின்ற காளமேகம்போல |
| மதி கலங்கி | எனது அறிவு ஒடுங்கி | | |
| விக்குள் பொர | விக்கலானது உபத்திரவிக்க | பறந்து வர வேண்டும் | விரைந்து வந்து சேவை சாதிக்கவேண்டும்; |
| உயிர் மாயும் போழ்து | எனது உயிர் நீங்கும் அந்திய காலத்தில் | | (கண்டாய் - அசை.) |

*** இதில் திருச்செங்குன்றூரென்றது, அத்தலத்தின் உள்ளிடமான திருச்சிற்றாறென்னும் திருப்பதியைக் கூறியவாறு. திருச்செங்குன்றூரென்னும் பெயர் கொண்ட வைணவத்தலம் கிடையாது; திருச்சிற்றாறென்பதே திவ்யதேசமாகும். "காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தையடியொற்றியன பின்னடிகள். .... .... (64)

7. திருநாவாய்.

பறந்து திரிதரினும் பாவியே னுள்ளம்
மறந்தும் பிறிதறிய மாட்டா—சிறந்த
திருநாவாய் வாழ்கின்ற தேவனையல் லாலென்
ஒருநாவாய் வாழ்த்தா துகந்து. (65)

| | | | |
|---|---|---|---|
| பாவியேன் உள்ளம் | தீவினையேனான எனது நெஞ்சானது | என் ஒரு நாவாய் | ஒருபடிப்பட்ட நாக்கையுடைய எனது வாயானது, |
| பறந்து திரிதரினும் | ஒரு நிலையில் நில்லாது அலைந்து திரியுமதாக இருந்தாலும் | சிறந்த திருநாவாய் வாழ்கின்ற | சிறந்த திருநாவாய்ப் பதியில் வாழாநின்ற |
| மறந்தும் | மறந்தாயினும் | தேவனை அல்லால் | எம்பெருமானைவிட்டு வேறொரு தெய்வத்தை |
| பிறிது | தேவதாந்தரத்தை | | |
| அறிய மாட்டாது | மதியாது; | உகந்து வாழ்த்தாது | விரும்பித் துதி செய்யாது. |

8. திருவல்லவாழ்.

உகந்தார்க்கெஞ் ஞான்று முளனா யுகவாது
இகந்தார்க்கெஞ் ஞான்று மிலனாய்த்—திகழ்ந்திட்டு
அருவல்ல வாழுருவ மல்லவென நின்றான்
திருவல்ல வாழுறையுந் தே. (66)

| | | | |
|---|---|---|---|
| திருவல்லவாழ் உறையும் தே | திருவல்லவாழ்ப்பதியிலுறைகின்ற தேவன் | எஞ்ஞான்றும் இலன் ஆய் | எக்காலத்தும் இல்லாதவனாகியும் |
| | | திகழ்ந்திட்டு | விளங்கி |
| உகந்தார்க்கு | தன்னை விரும்பினமெய்யடியார்கட்கு | அரு அல்ல | அருவப் பொருளுமாகான், |
| எஞ்ஞான்றும் உளன் ஆய் | எக்காலத்தும் உள்ளவனாகியும், | வாழ் உருவம் அல்ல | கண்களுக்குப் புலப்பட்டுத் தோன்றுகிற உருவப் பொருளுமாகான், |
| உகவாது இகந்தார்க்கு | தன்னை யுகவாமல் இல்லை செய்யும் நாஸ்திகர்கட்கு | என நின்றான் | என்று கூறுமாறு இருக்கின்றான். |

*** "மெய்யர்க்கே மெய்யனாகும் .......பொய்யர்க்கே பொய்யனாகும்" என்ற திருமாலைப் பாசுரம், "உளனெனிலுளன் அவனுருவமிவ்வுருவுகள், உளனலனெனில் அவனருவமிவ்வருவுகள்" "காணலுமாகானுளனல்லனில்லையல்லன்" என்ற திருவாய்மொழிப் பாசுரங்கள் முதலியவற்றின் எமது திவ்யார்த்த தீபிகையுரையை நோக்கி விசேஷமுணர்க. அரு—ஸூக்ஷ்மம்; உருவம்—ஸ்தூலம். ... (66)

9. திருவண்வண்டூர்.

**தேவு முலகு முயிருந் திரிந்துநிற்கும்**
**யாவும் படைத்த விறைகண்டீர்—பூவில்**
**திருவண்வண் டூருறையுந் தேவாதி தேவன்**
**மருவண்வண் டூர்துளவ மால். (67)**

| | |
|---|---|
| பூவில் | இப்பூவுலகிலுள்ள |
| திரு வண் வண்டூர் | திருவண் வண்டூர்ப்பதியில் |
| உறையும் தேவாதி தேவன் | வாழ்கின்ற தேவாதி தேவனை |
| மரு வள் வண்டு ஊர் துளவம் மால் | வாசனையுடையதும் வளப்பமுடையதும் வண்டுகள் மொய்க்கப்பெற்றதுமாகிய திருத்துழாய் மாலையை யணிந்த திருமால் |
| தேவும் உலகும் | தேவர்களையும் உலகங்களையும் |
| உயிரும் | பிராணிகளையும் |
| திரிந்து நிற்கும் யாவும் | (கீழ்க்கூறிய பொருள்களைவிட) வேறாக நிற்கின்ற அசேதனப் பொருள்களெல்லாவற்றையும் |
| படைத்த இறை கண்டீர் | ஆதியிலுண்டாக்கின ஸ்வாமிகாண்மின். |

10. திருவாட்டாறு.

**மாலை முடிநீத்து மலர்ப்பொன் னடிநோவப்**
**பாலைவனம் நீபுகுந்தாய் பண்டென்று—சாலவுநான்**
**கேட்டாற் றுயிலேன்காண் கேசவனே பாம்பணைமேல்**
**வாட்டாற்றுக் கண்டுயில்கொள் வாய். (68)**

| | |
|---|---|
| கேசவனே | எம்பெருமானே! |
| பண்டு | முன்பு இராமாவதாரத்தில் |
| மாலை முடி நீத்து | அரசர்க்குரிய மாலையையும் கிரீடத்தையும் பூணாமல் துறந்து |
| மலர் பொன் அடி நோவ | பாதாரவிந்தங்கள் நோகும்படி |
| பாலை வனம் நீ புகுந்தாய் என்று கேட்டால் | கொடுங்காட்டில் நீ நடந்து சென்றாயென்பது கேட்டவளவிலே |
| நான் சாலவும் துயிலேன் காண் | நான் சிறிதும் கண்டுயில் கொள்ளேன்; |
| | (அவ்வாறிருக்க, நீயோ) |
| வாட்டாறு | திருவாட்டாற்றுப் பதியிலே |
| பாம்பு அணை மேல் | சேஷ சயனத்தின் மீது |
| கண் துயில் கொள்வாய் | (கவலையின்றிக்) கண்ணுறங்குகின்றாயந்தோ!, |

*** பதினான்கு வருடகாலம் பொன்னடிகள் குருதிசோரக் கொடுங்காட்டிலே நடந்து வருந்திய நீ யாதொரு கவலையுமின்றி நிச்சிந்தையாகத் துயில, ஒரு துயரமுமனுபவியாத நான் கவலையினாற் கண்ணுறங்குவதில்லையென்று சொன்னவிது ஒரு வகைச் சமத்காரோக்தி. ... ... ... ... ... (68)

### 11. திருவித்துவக்கோடு.

வாய்த்த கருமமினி மற்றில்லை நெஞ்சமே
தோய்த்த தயிர்வெண்ணெய் தொட்டுண்ட—கூத்தன்
திருவிற் றுவக்கோடு சேர்ந்தாற் பிறவிக்
கருவிற் றுவக்கோடுங் காண். (69)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | எனது மனமே, | சேர்ந்தால் | சேரப்பெற்றால் |
| தோய்த்த தயிர் வெண்ணெய் தொட்டு உண்ட கூத்தன் | தோய்த்தபடியே யிருந்த தயிரையும் வெண்ணெயையும் களவுகண்டு புஜித்த மாயக் கூத்தனுடைய தான | கருவின் பிறவி துவக்கு ஓடும் | (பிறகு) கர்ப்பஸம்பந்தம் நேராதொழியும்; (ஆதலால்) |
| | | வாய்த்த கருமம் | நாம் செய்யக் கிடந்த காரியம் |
| திரு விற்றுவக் கோடு | வித்துவக்கோட்டுப் பதியை | இனி மற்று இல்லை | இனிமேல் வேறெதுவுமில்லை. |

### 12. திருக்கடித்தானம்.

காண விரும்புமென்கண் கையுந் தொழவிரும்பும்
பூண விரும்புமென்றன் புன்றலைதான்—வாணன்
திருக்கடித் தானத்தான் திகிரியான் றண்டான்
திருக்கடித்தா னத்தானைச் சென்று. (70)

| | | | |
|---|---|---|---|
| வாணன் | பாணாஸுரனுடைய | என் கண் காண விரும்பும் | எனது கண்கள் காண்பதற்கு ஆசைப்படும்; |
| திருக்கு | விபரீதச் செயலை | | |
| அடித்தான் | ஒழித்தவனும் | கையும் தொழ விரும்பும் | எனது கைகளும் கூப்பி வணங்க ஆசைப்படும்; |
| நத்தான் | சங்கையுடையவனும் | | |
| திகிரியான் | சக்கரத்தையுடையவனும் | என் தன் புன் தலை | எனது புல்லிய தலையும் |
| தண்டான் | கதாயுதத்தையுடையவனுமான | | |
| திருக்கடித்தானத்தானை சென்று | திருக்கடித்தானத் திருப்பதி யெம்பெருமானை போய்க்கிட்டி | தாள் பூண விரும்பும் | (அப்பிரானது) திருவடிகளைச் சூடிக் கொள்ள விரும்பும். |

### 13. திருவாறன்விளை.

சென்று புனல்மூழ்கிச் செய்தவங்கள் செய்தாலும்
வென்றுபுல னைந்தடக்கி விட்டாலும்—இன்றமிழால்
மாறன் விளைத்த மறையோதார்க் கில்லையே
ஆறன் விளைத்திருமா லன்பு. (71)

| | | | |
|---|---|---|---|
| சென்று புனல மூழ்கி | யாத்திரைசென்று புண்ணிய தீர்த்தங்களில் நீராடி | மாறன் இன்தமிழால் விளைத்த மறை ஓதார்க்கு | நம்மாழ்வார் செவிக்கினிய தமிழ்ப்பாடலாகச் செய்தருளிய வேதத்தை ஓதியுணராதவர்களுக்கு |
| செய் தவங்கள் செய்தாலும் | சிறந்த தவங்களைச் செய்தாலும் | | |
| புலன் ஐந்து வென்று அடக்கி விட்டாலும் | பஞ்சேந்திரியங்களையும் ஜயித்து அடக்கினலும் | ஆறன் விளை திருமால் அன்பு | திருவாறன் விளையெம்பெருமானுடைய அன்பு |
| | | இல்லை | உண்டாகமாட்டாது. |

*** ஈற்றடியில் 'திருமாலன்பு' என்றது-திருமாலிடத்து அன்பு என்றும், திருமால் செய்யுமன்பு என்றும் இருவகையாகவும் பொருள்படும். இரண்டும் உத்தேச்யமேயன்றோ; * ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய: * என்ற கீதை காண்க. .... .... .... .... .... (71)

மலைநாட்டுத் திருப்பதிகள் முற்றும்.

---

## மலைநாட்டுத் திருப்பதிகளுக்கு ஆழ்வார்பாடல் குறிப்பு.

59. திருவனந்தபுரம். (ஒருவர்பாடல்.) நம்மாழ்வார். திருவாய்மொழி. 10-2. *கெடுமிடர் பதிகம்.

60. திருவண்பரிசாரம். (ஒருவர்பாடல்.) நம். திருவாய் 8-3, 7 * வருவார் செல்வார் வண்பரிசாரத்திருந்த. * இப்பதிக முழுதும் இத்திருப்பதி விஷயமென்பது ஆசார்ய ஹ்ருதயகாரர் திருவுள்ளம்.

61. திருக்காட்கரை. (ஒருவர்பாடல்.) நம். திருவாய் 9-6 * உருகுமால் பதிகம்.

62. திருமூழிக்களம். (இருவர்பாடல்.) நம்மாழ். திருவாய் 9-7. *எங்கானலகங்கழி-பதிகம். திருமங்கை. பெ. தி. 7-1-6. * பணியேய்பரங்.......திருமூழிக்களத்து விளக்கே. * பெரியமடல். * மூழிக்களத்து விளக்கினை (வளத்தினை) * திருநெடுந் 10 * * பொன்னனைய்....திருமூழிக்களத்தானைய் முதலானையே. *

63. திருப்புலியூர். (இருவர்பாடல்.) நம். திருவாய் 8—9 * கருமாணிக்கமலை 10. திருமங்கை. சிறிய மடல். * பேராலி....திருப்புலியூர்.*

64. திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றாறு. (ஒருவர்பாடல்). நம். திருவாய் 8-4. * * வார்கடா வருவி பதிகம்.

65. திருநாவாய். (இருவர்பாடல்), நம்மாழ். திருவாய். 9-8. * அறுக்கும் வினை பதிகம். திருமங்கை. பெ. தி. 6-8-3 * நாவாய....நாவாயுளானை. * 10-1-9. * கம்பமா களிறு....காண்டும் நாவாயுளே.*

66. திருவல்லவாழ். (இருவர்பாடல்.) நம். திருவாய். 5-9 * மானேய் நோக்கு-பதிகம். திருமங்கை. பெ. தி. 9-7. * தந்தைதாய்மக்களே-பதிகம். பெரிய மடல். * வல்லவாழ்ப்பின்னை மணாளனை *

67. திருவண்வண்டூர். (ஒருவர்பாடல்). நம். திருவாய் 6-1.* வைகல் பூங்கழிவாய்-பதிகம்.

68. திருவாட்டாறு.(ஒருவர்பாடல்.)நம்.திருவாய்.10-6.* அருள்பெறுவார்-பதிகம்.

69. திருவித்துவக்கோடு. (ஒருவர்பாடல்) குலசேகரர். பெரு-தி. 5. * தருதுயரம் 10.

70. திருக்கடித்தானம். (ஒருவர்பாடல்) நம். திருவாய். 8-6. * எல்லியுங் காலை 10.

71. திருவாறன்விளை. (ஒருவர்பாடல்.)நம். திருவாய்.7-10* இன்பம் பயக்க-பதிகம்.

மலைநாட்டுத் திருப்பதிகளுக்குப் பாடல் குறிப்பு முற்றிற்று.

---

# நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டு.

1. திருவயிந்திரபுரம்.

**அன்பணிந்த சிந்தையராய் ஆய்ந்த மலர்தூவி**
**முன்பணிந்து நீரெமக்கு மூர்த்தியரே—யென்பர்**
**எமையிந் திரபுரத்தார்க்கு இன்தொண்ட ராஞர்**
**தமையிந் திரபுரத்தார் தாம்.** (72)

| | | | |
|---|---|---|---|
| எம் ஐயிந்திர புரத்தார்க்கு | எமது திருவஹீந்திர புரத் தெம்பெருமானுக்கு | அன்பு அணிந்த சிந்தையர் ஆய் | பக்தி பூண்ட மனமுடையராய் |
| இன் தொண்டர் ஆஞர் தமை | சிறந்த பக்தரானவர்களை | ஆய்ந்த மலர் தூவி | சிறந்த கற்பகப் பூக்களைச் சொரிந்து |
| இந்திர புரத்தார் தாம் | தேவலோகத்தவர்கள் | முன் பணிந்து | முன்னே வந்துவணங்கி |
| | | நீர் எமக்கு மூர்த்தியரே என்பர் | 'நீங்கள் எங்கட்குத் தெய்வமாவீர்கள்' என்று போற்றுவர். |

2. திருக்கோவலூர்.

**தாமரையா ஞுதியாய்த் தாவரங்க ளீறுன**
**சேம வுயிருஞ் செகமனைத்தும்—பூமடந்தைக்கு**
**ஆங்கோ வலாயுதன் பின்னு வவதரித்த**
**பூங்கோ வலாயன் பொருள்.** (73)

| | | | |
|---|---|---|---|
| தாமரையான் ஆதி ஆய் | பிரமன் முதலாக | பூ மடந்தைக்கு ஆம் கோ | பெரிய பிராட்டியார்க்கு உகந்த தலைவனும் |
| தாவரங்கள் ஈறு ஆன | ஸ்தாவரப் பொருள்கள் வரையிலுமுள்ள | அலாயுதன் பின் ஆ அவதரித்த | ஹலாயுதனை பலராமனுக்குத் தம்பியாகத் திருவவதரித்தவனுயுமுள்ள |
| சேமம் உயிரும் | உலகத்து வாழும் ஜீவ ராசிகளும் | பூ கோவல் ஆயன் | திருக்கோவலூரெம் பெருமானுடைய |
| செகம் அனைத்தும் | (அவற்றிற்கெல்லா மிடமான) எல்லாவுலகங்களும் | பொருள் | படைப்புப் பொருள்களாம். |

நடுநாட்டுத் திருப்பதிகள் முற்றும்.

---

## நடுநாட்டுத்திருப்பதிகளிரண்டுக்கு ஆழ்வார் பாடல் குறிப்பு.

72. திருவயிந்திரபுரம். (ஒருவர்பாடல்) திருமங்கை. பெ. தி. 3—1 * இருந்தண்மா நிலம் பதிகம்.

73. திருக்கோவலூர். (மூவர்பாடல்.) பொய்கை. 77. * வேங்கடமும்.......நீள் கோவல் * 86. * நீயுந் திருமகளும்....காமருபூங்கோவல் * பூதத்தார். 70. * தமருள்ளம் தஞ்சை....மாமலைகோவல். * திருமங்கை. பெ. தி. 2—4—1. * அன்ருயர்....தடந் திகழ் கோவல்நகர் * 2—10. * மஞ்சாடு வரையேழும்-பதிகம். 5—6—7. * சிந்தனையை....கொந்தணைந்த பொழிற்கோவல் * 7—3—2. * தாய் நினைந்த....மதிட்கோவ லிடைகழியாயனை * 7—10—4. * பேய்முலைத்தலை...மாயனை மதிட்கோவலிடைகழி.*

சிறியமடல். * சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே. * பெரியமடல் * கோவலூர் மன்னுமிடைகழி. * திருநெடுந். 6. * அலம்புரிந்த....பொன்விளக்கும் பொய்கை வேலிப் பூங்கோவலூர். * 7. * வற்புடைய...பூங்கோவலூர் தொழுதும். * 17. * பொங்கார்...தண்கோவலூர் பாடியாட * * .... .... .... *

நடுநாட்டுத் திருப்பதிப் பாடல் குறிப்பு முற்றிற்று.



# தொண்டைநாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டு

### 1. திருக்கச்சி அத்திகிரி.

**பொருளாசை மண்ணாசை பூங்குழலார் போகத்**
**திருளாசை சிந்தித் திராதே—அருளாளன்**
**கச்சித் திருப்பதியா மத்தியூர்க் கண்ணன்தாள்**
**இச்சித் திருப்பதியா மென்று. (74)**

| | | | |
|---|---|---|---|
| பொருள் ஆசை | பணத்திலாசையும் | கச்சி திருப்பதி ஆம் அத்தியூர் கண்ணன் | காஞ்சீ க்ஷேத்ரங்களிலொன்றான ஸ்ரீஹஸ்திகிரியிலுறையும் பெருமானுடைய |
| மண் ஆசை | நிலத்திலாசையும் | | |
| பூ குழலார் போகத்து இருள் ஆசை | தமோமயமான பெண்ணாசையும் (ஆகிய இவற்றை) | | |
| சிந்தித்து இராதே | மனத்திற் கொள்ளாமல் | தாள் | திருவடிகளை |
| | | யாம் இச்சித்து இருப்பது | நாம் விரும்பி கவலையற்றுக் கிடப்பது |
| அருளாளன் | பேரருளாளனாகிய | என்று | எந்நாளோ ? |

* * * கச்சியென்னும் தமிழ்ச்சொல்லானது காஞ்சீ என்னும் வடசொல்லின் விகாரம்; "க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ர அஞ்சிதோ ஹரி:, தஸ்மாத் காஞ்சீதி விக்யாதா புரீ புண்யவிவர்த்திநீ." என்கிற புராண சுலோகத்தின்படி பிரமன் வேள்வி செய்து பூஜித்த தலத்தையே காஞ்சி யென்கிற சொல்லும் கச்சியென்கிற சொல்லும் கூறும். எனவே, கச்சியென்று ஆழ்வார்களின் திருவாக்கில் வந்தவிடமெல்லாம் தேவப்பெருமாள் ஸன்னிதியை [ஸ்ரீ ஹஸ்திகிரியை]ச் சொல்லியே தீருமென்பது அறியத்தக்கது. இருப்பது யாம்—இருப்பதியாம். "யவ்வரினிய்யாம்" என்பது நன்னூல். ... ... ... ... (74)



### 2. திருவட்ட புயங்கம் [அஷ்டபுஜம்]

**என்றுந் துயருழக்கு மேழைகாள்! நீங்களிளங்**
**கன்றுபோல் துள்ளிக் களித்திரீர்—அன்றுநட**
**மிட்ட புயங்கத் திருசரண மேசரணென்**
**றட்டபுயங் கத்தற்கா ளாய். (75)**

| | | | |
|---|---|---|---|
| என்றும் துயர் உழக்கும் ஏழைகாள் | எப்போதும் ஸாம்ஸாரிக தாபங்களில் வருந்துகின்ற அறிவிலிகளே! | இரு சரணமே தஞ்சம் என்று | (எம்பெருமானுடைய) உபயபாதங்களே ரக்ஷகமென்று உறுதி கொண்டு |
| நீங்கள் | நீங்கள் | அட்ட புயங்கத்திற்கு ஆள் ஆய் | அட்ட புயகரத்திலுள்ள திருமாலுக்கு அடிமைப்பட்டு |
| அன்று புயங்கத்து நடம் இட்ட | முற்காலத்தில் காளிய நாகத்தின் மீது கூத்தாடிய | இள கன்று போல் துள்ளி களித்து இரீர் | இளங்கன்று போல் நிர்விசாரமாய் மகிழ்ந்திருங்கள். |

* * * அஷ்டபுஜனான எம்பெருமானுடைய க்ருஹம் என்பதாக விவக்ஷித்து இத்தலத்தைத் திருமங்கையாழ்வார் 'அட்டபுயகரம்' என்றார்; அதனையே இவர் அட்டபுயங்கமென்றாரென்று கொள்க. மூன்றாமடியில்—புஜங்கமென்னும் வடசொல் புயங்கமென்றாயிற்று; ஸர்ப்பமென்று பொருள். ... ... .... (75)

3. திருத்தண்கா. [பெண்மை எய்திப் பேசும் பாசுரம்.]

**ஆட்பட்டேன் ஐம்பொறியால் ஆசைப்பட் டேனறிவும்**
**கோட்பட்டு நானுங் குறைபட்டேன்—சேட்பட்ட**
**வண்காவை வண்துவரை வைத்த விளக்கொளிக்குத்**
**தண்காவைச் சேர்ந்தான் தனக்கு, (76)**

| | | | |
|---|---|---|---|
| சேண் பட்ட வண் காவை | தேவலோகத்திலுள்ள அழகிய பாரிஜாத விருக்ஷத்தை | ஆள் பட்டேன் | அடிமைப்பட்டேன்; |
| வண் துவரை வைத்த | (தனது) அழகிய த்வாரகாபுரியிலே கொணர்ந்து நாட்டிய | ஐம்பொறியால் ஆசைப் பட்டேன் | எனது பஞ்சேந்திரியங்களாலும் அப்பெருமானை யநுபவிக்க ஆசை கொண்டேன்; |
| தண் காவை சேர்ந்தான் தனக்கு விளக்கொளிக்கு | திருத்தண்காவிலெழுந்தருளியிருப்பவனாகிய தீபப்ரகாச பகவானுக்கு | அறிவும் கோள் பட்டு | எனது அறிவும் அப்பெருமானால் கவரப்பட்டு |
| | | நாணும் குறை பட்டேன் | லஜ்ஜையும் குறையப் பெற்றேன். |

* * * காஞ்சீபுரத்திலுள்ள தீப ப்ரகாசபகவான் அல்லது விளக்கொளியெம்பெருமானுறையும் தலத்திற்குத் தண்காவென்று திருநாமம். எம்பெருமானைக் கலந்து பிரிந்தநாயகி, தான் அவன்பாற்கொண்ட காதலின்மிகுதியைத் தோழிக்குரைத்தது.

4. திருவேளுக்கை.

**தனக்குரிய னாயமைந்த தானவர்கோன் கெட்டான்**
**உனக்குரிய னாயமைந்த னுய்ந்தான்—நினைக்குங்கால்**
**வேளுக்கை யாளரியே வேறுதவி யுண்டோவுன்**
**தாளுக்கா ளாகா தவர்க்கு. (77)**

| | | | |
|---|---|---|---|
| வேளுக்கை ஆள் அரியே | திருவேளுக்கைத் தலத்து நரசிங்கமூர்த்தியே! | உய்ந்தான் | நல்வாழ்வு பெற்றான்; (ஆதலால்) |
| தனக்கு உரியன் ஆய் அமைந்தி | தனக்குத்தானே தெய்வமென்று செருக்கியிருந்த | நினைக்கும் கால் | ஆலோசிக்குமிடத்து |
| தானவர் கோன் கெட்டான் | இரணியாசுரன் அழிந்தொழிந்தான்; | உன் தாளுக்கு ஆள் ஆகாதவர்க்கு வேறு உதவி உண்டோ | உனது திருவடிகட்கு அடிமைப்படாதவர்க்குத் துணை வேறு உளதோ? (இல்லை) |
| உனக்கு உரியன் ஆய மைந்தன் | உனக்கே அடிமையாகப் பொருந்திய ப்ரஹ்லாதனென்னும் குமாரன் | | |

* * * 'வேள் இருக்கை' என்னுமிரண்டு சொற்கள் வேளுக்கையென மருவிற்று. வேள் - காமம்; அதாவது இச்சை; அதனாலெழுந்தருளி யிருக்குமிடம் வேளுக்கை; இதற்கு நேரான வடசொல் திருநாமம் காமாஸிகா; "காமாத் அதிவஸந் ஜீயாத் கச்சி நத்புத கேஸரீ" என்றார் வேதாந்தவாசிரியர். ... ... (77)

5. திருப்பாடகம் [பாண்டவ தூதர்ஸன்னிதி.]

**தவம்புரிந்த சேதனரைச் சந்திரனு தித்தன்**
**சிவன்பிரம னிந்திரனுச் செய்கை—உவந்து**
**திருப்பா டகமருவுஞ் செங்கண்மால் தன்மார்**
**பிருப்பா டகவுரையா லே.** (78)

| | | | |
|---|---|---|---|
| உவந்து திரு பாடகம் மருவும் | திருவுள்ள வுகப்புடனே திருப்பாடகத்திற் பொருந்தியிருக்கின்ற | சந்திரன் ஆதித்தன் சிவன் பிரமன் இந்திரன் ஆ செய்கை | சந்திரனுகவும் ஸூரியனுகவும் சிவனுகவும் பிரமனுகவும் இந்திரனுகவும் ஆக்கிவைப்பது |
| செம் கண் மால் | புண்டரீகாக்ஷனுன திருமால் | | |
| தவம் புரிந்த சேதனரை | (உயர்ந்த பதவிகள் கிடைக்கவேணு மென்று) தவம் செய்த ஆன்மாக்களை | தன்மார்பு இருப்பாள் தகவு உரையாலே | தனது திருமார்பில் வீற்றிருப்பவளான திருமகளின் புருஷகார வார்த்தையினுலாம். |

* * * பாடு அகம் - பாடகம்; பெருமைதோற்ற விருக்கும் தலம் என்றபடி. பாண்டவதூதனுகச் சென்றபோது "அரவு நீள்கொடியோ னவையுளாசனத்தை அஞ்சிடாதேயிட, அதற்குப் பெரியமாமேனி யண்டமூடுருவப் பெருந்திசை யடங்கிட நிமிர்ந்தோன்" [பெ. தி. 9—1—8] என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப்படியே பொய்யாசனமிட்ட துரியோதனனுடைய ஸபையில் பெருங்குழியினுள்ளே விச்வரூபமெடுத்த அவஸரமாக மிகப்பெரிய திருமேனி வளர்த்தியோடே எழுந்தருளியிருக்கும் தலம் பாடகம். ... ... ... ... ... (78)

6. திருநீரகம்.

**ஆலத் திலைசேர்ந் தழியுலகை யுட்புகுந்த**
**காலத்தி லெவ்வகைநீ காட்டினுய்—ஞாலத்துள்**
**நீரகத்தாய் நின்னடியேன் நெஞ்சகத்தாய் நீண்மறையின்**
**வேரகத்தாய் வேதியற்கு மீண்டு.** (79)

| | | | |
|---|---|---|---|
| ஞாலத்துள் நீரகத்தாய் | இந்நிலத்தில் நீரகத் திருப்பதியிலுறைபவனே! | உள் புகுந்த காலத்தில் | அம்முனிவன் உனது திருவயிற்றினுள்ளே புகுந்திருந்த காலத்தில் |
| நின் அடியேன் நெஞ்சு அகத்தாய் | உனக்கு ஆட்பட்ட எனது மனத்திலெழுந்தருளி யிருப்பவனே! | நீ ஆலத்து இலை சேர்ந்து | நீ ஆலிலையின் மீது பள்ளி கொண்டு |
| நீள் மறையின் வேர் அகத்தாய் | அனந்தமான வேதங்களால் பிரதிபாதிக்கப்பட்ட மூலப்பொருளாயுள்ளவனே! | அழி உலகை | பிரளயத்திலழிந்துபோன வுலகங்களை |
| வேதியற்கு | பிரளயக்காட்சியைக் காணவெண்ணிய மார்க்கண்டேயனுக்கு | எவ்வகை மீண்டு காட்டினுய் | எவ்வாறு மறுபடியும் காட்டியருளினுய்? |

* * * என்றும் பதினுருக நீண்ட ஆயுள்பெற்ற மார்க்கண்டேயன் பிரளயக் காட்சியைக் காணவேண்டித் தவம்புரிந்து அங்ஙனமே அநுக்ரஹம்பெற்று, பின்பு மாயவன் மாயையினுல் மஹாபிரளயம் தோன்ற அப்பிரளயார்ணவத்தில் அலைந்து வருந்திய அம்முனிவனுக்கு அவ்வெள்ளத்தில் ஆலிலையின்மீது ஒரு குழந்தை வடிவ

மாய் அறிதுயிலமர்ந்த நீ முன்பே அழிந்த உலகங்களையும் எல்லாச் சராசரங்களையும் உனது திருவயிற்றினுட் காட்டியது என்ன ஆச்சரியமென்று ஐயங்கார் தாம் வியப்புறுவதை வினாமுகத்தால் வெளியிட்டவாறு. .... ... ... (79)

## 7. நிலாத்திங்கள் துண்டம்.

**மீண்டுந் தெளியார்கள் மேதினியோர் நின்னடிப்பூப்**
**பாண்டரங்க மாடி படர்சடைமேல்—தீண்டிக்**
**கலாத்திங்கள் துண்டத்தின் மீதிருப்பக் கண்டு**
**நிலாத்திங்கள் துண்டத்தா னே.** **(80)**

| | | | |
|---|---|---|---|
| நிலாத் திங்கள் துண்டத்தானே | நிலாத் திங்கள் துண்டப்பதியிலுறையும் பெருமானே ! | தீண்டி | பொருந்தி |
| | | கலா திங்கள் துண்டத்தின் மீது | (அச்சிவனணிந்துள்ள) இளம் பிறைச் சந்திரனுக்கும் மேலே |
| நின் அடி பூ | (பாரதயுத்தத்தில் அர்ஜுநன்) உனது திருவடிகளில் சாத்திய புஷ்பங்கள் | இருப்ப கண்டும் | இருப்பது கண்டிருந்தும் |
| | | மேதினியோர் | இப்பூமியிலுள்ளவர்கள் |
| | | மீண்டும் | மறுபடியும் |
| பாண்டரங்கம் ஆடி | பாண்டரங்கக் கூத்தாடும் சிவபெருமானது | தெளியார்கள் | உனது பரத்துவத்திலே தெளிவில்லாதவர்களாயிருக்கின்றார்களந்தோ! |
| படர் சடைமேல் | படர்ந்த ஜடையின் மீது | | |

* * * திருவாய்மொழியில் * தீர்த்தனுலகளந்த சேவடிமேல் பூந்தாமம், சேர்த்தியவையே சிவன் முடிமேல் தான் கண்டு, பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை, பேர்த்து மொருவரால் பேசக் கிடந்ததே * என்ற பாசுரத்தை யடியொற்றிப் பணித்த செய்யுளிது. அவ்விடத்து எமது திவ்யார்த்ததீபிகையுரை காண்க. பாண்டரங்கமாடி—சிவபெருமான். பாண்டரங்கமென்பது ஒரு கூத்து. மூன்றாமடியின் முடிவில் கண்டும் என்றது—சாஸ்திரங்களாலறிந்து வைத்துமென்றபடி. .... .... ... .... ... (80)

## 8. திருவூரகம். [உலகளந்த பெருமாள் சன்னிதி.]

**நேசத்தா லன்றுலகை நீர்வார்க்க வைத்தளந்த**
**வாசத்தாள் என்தலைமேல் வைத்திலையேல்—நாசத்தால்**
**பாரகத்து ளன்றிநான் பாழ்நரகில் வீழ்ந்தென்கொல்**
**ஊரகத்துள் நின்றா யுரை.** **(81)**

| | | | |
|---|---|---|---|
| ஊரகத்துள் நின்றாய் | திருவூரகத் திருப்பதியில் நிற்கும் திருமாலே ! | வாசம் தாள் | நறுமணமுள்ள பாதாரவிந்தங்களை |
| அன்று | முன்னாளில் | என் தலை மேல் வைத்திலை ஏல் | எனது தலைமீது வைத்திடாயானால் |
| நீர் வார்க்க | (வாமனாவதாரத்தில் மஹாபலி) நீர்வார்த்த போது | நான் | நாயினேன் |
| | | பார் அகத்துள் அன்றி | இப்பூமியில் வாழ்தலுமில்லாமல் |
| நேசத்தால் | உயிர்களிடத்து அன்பினால் | நாசத்தால் | நாசமடைந்து |
| உலகை வைத்து அளந்த | மூவுலகங்களையும் அளப்பதாகக் கொண்டு அளந்த | பாழ் நரகில் வீழ்ந்து என் கொல் | பாழான நரகத்தில் விழுந்தால் தான் என்ன ? |
| | | உரை | நீ கூறுவாயாக. |

* * * திருவூரகமென்னுந் திருப்பதி உலகளந்த பெருமாள் ஸன்னிதியாதலால் திரிவிக்கிரமாவதார கதையை யெடுத்துப் பேசுகிறாரிதில். பூமியையளப்பதென்பது ஒரு வியாஜம்; உலகத்தார்களின் தலைகளின்மீது திருவடியை வைத்தருளவேணு மென்பதே உத்தேசயமென்பதைக் காட்டும் நேசத்தாலென்பது. உனது திருவடிகளை எனது தலைமீது பொறித்து என்னை ஆட்கொள்ளாது உபேக்ஷித்தாயாகில் யான் ஈடேறுதலின்றிக் கொடு நரகத்தில் வீழ்வது திண்ணம் என்பது இச் செய்யுளின் கருத்து. உரகம் என்கிற வடசொல் ஊரகமென்று நீண்டிருக்கின்றது; இத்தலத்தி லெம்பெருமான் ஆதிசேஷரூபமாகவும் காட்சியளிப்பதுண்டு. ... ... (81)

## 9. திருவெஃகா. [யதோக்தகாரி ஸன்னிதி.]

**உரைகலந்த நூலெல்லா மோதி யுணர்ந்தாலும்**
**பிரைகலந்த பால்போல் பிறிதாம்—தரையில்**
**திருவெஃகா மாயனுக்கே சீருறவாந் தங்கள்**
**உருவெஃகா வுள்ளத்தி னோர்க்கு. (82)**

| | | | |
|---|---|---|---|
| தரையில் | இந்நிலத்தில் | உரை கலந்த நூல் எல்லாம் | உரையோடுங் கூடிய சாஸ்திரங்களெல்லா வற்றையும் |
| திரு வெஃகா மாயனுக்கே | ஸ்ரீயதோக்தகாரி யெம் பெருமானுக்கே | ஓதி உணர்ந்தாலும் | கற்று அறிந்திருந்தாலும் |
| சீர் உறவு ஆம் | சிறந்த ஸம்பந்தம் பெற்ற | பிரை கலந்த பால் போல் | பிரை சேர்ந்த பாலைப் போல |
| தங்கள் உரு வெஃகா | தமது ஸ்வரூபத்தை விரும்பியறியாத | பிறிது ஆம் | (அவ்வறிவு) திரியுந்தன் மையதாய் விடும். |
| உள்ளத்தினோர்க்கு | மனத்தையுடையவர்களுக்கு, | | |

* * * சாஸ்திரங்களைக் கற்று வித்வான்களென்று பெயர் பெறுவதில் சிரம மில்லை; அக் கல்வியறிவின் பயனாகிய ஸ்வஸ்வரூபஜ்ஞானம் மனத்திற் பதிந்தால்தான் பயன்படுமேயன்றி அனுட்டானமில்லாத வெறுங் கல்வியறிவு பிரையால் திரிந்த பால் ஒன்றுக்கு முதவாததுபோலப் பயனற்றதாகுமென்பது தேர்ந்த கருத்து. இத்தலத் தெம்பெருமானுக்கு வேகாஸேது வென்று வடமொழித் திருநாமம்; அதன் ஏகதேச மாகிய வேகா என்பது வெஃகா என்றாயிற்று. .... ... ... (82)

## 10. திருக்காரகம்.

**ஓராதார் கல்வி யுடையேம் குலமுடையேம்**
**ஆரா தனமுடையேம் யாமென்று—சீராயன்**
**பூங்கா ரகங்காணப் போதுவார் தாள்தலைமேல்**
**தாங்கா ரகங்காரத் தால். (83)**

| | | | |
|---|---|---|---|
| ஓராதார் | அவிவேகிகள் | சீர் ஆயன் | ஸ்ரீகோபாலனை பெருமானுடைய |
| யாம் கல்வி உடையேம் | யாம் நிரம்பக் கற்றிருக்கிறோமென்றும் | பூ காரகம் | திருக்காரகத்தை |
| குலம் உடையேம் | உயர்குலப் பிறப்புடையோ மென்றும் | காண | சேவிக்குமாறு |
| ஆரா தனம் உடையேம் என்று | பலரால் வெகுமானிக்கப் படுஞ்சிறப்புடையோ மென்றும் கருதி | போதுவார் | யாத்திரை செய்பவர்களினுடைய |
| அகங்காரத்தால் | செருக்கினால் | தாள் | திருவடிகளை |
| | | தலை மேல் தாங்கார் | தமது முடிக்கு அணியாகக் கொள்ளார்கள். |

### 11. திருக்கார்வானம்.

**தாலேலோ வென்றுய்ச்சி தாலாட்டித் தன்முலைப்பா**
**லாலேயெவ் வாறுபசி யாற்றினள்முன்—மாலேபூங்**
**கார்வானத் துள்ளாய் கடலோடும் வெற்போடும்**
**பார்வான முண்டாய்நீ பண்டு. (84)**

| | | | |
|---|---|---|---|
| மாலே | திருமாலே! | முன் | கிருஷ்ணவதாரத்தில் |
| பூ கார்வானத்து உள்ளாய் | அழகிய கார்வானப் பதியிலுறைபவனே! | ஆய்ச்சி | யசோதைப்பிராட்டி |
| கடலோடும் வெற்போடும் | சமுத்திரங்களோடும் மலைகளோடுங்கூட | தாலேலோ என்று தாலாட்டி | தாலேலோ வென்று பாடித் தாலாட்டுதல் செய்து |
| பார் வானம் | பூமியையும் ஆகாசத்தையும் | | |
| பண்டு | முற்காலத்திலே [பிரளய காலத்தில்] | தன் முலை பாலாலே | தனது ஸ்தன்யத்தினால் |
| நீ உண்டாய் | நீ அமுது செய்தருளினாய்; (அப்படிப்பட்டவுன்னை) | எ ஆறு பசி ஆற்றினள் | எப்படி உன் பசியைத் தணித்தாளோ? |

* * * கார்வானத்துறையுங் கண்ணனே! உனது உலகமுண்ட பெருவயிற்றுக்கு ஆய்ச்சியின் முலைப்பால் எவ்வாறு பசிதணிக்க வல்லது? என்று வினவும் முகத்தால் அவனது மாயச்செயல் வல்லமையை அநுபவித்தவாறு. பொய்கையாழ்வாருடைய திருவந்தாதியில் "வானாகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்த், தேனாகிப் பாலாந் திருமாலே - ஆனாய்ச்சி வெண்ணெய் விழுங்க நிறையுமே முன்னொருநாள், மண்ணையுமிழ்ந்த வயிறு." என்றுள்ள பாசுரத்தை அடியொற்றினபடி. ... (84)

### 12. திருக்கள்வனூர்.

**பண்டேயுன் தொண்டாம் பழவுயிரை யென்னதென்று**
**கொண்டேனைக் கள்வனென்று கூறாதே—மண்டலத்தோர்**
**புள்வாய் பிளந்த புயலே யுனைக்கச்சிக்**
**கள்வாவென் றோதுவதென் கண்டு. (85)**

| | | | |
|---|---|---|---|
| புள் வாய் பிளந்த புயலே | பகாஸுரனுடைய வாயைக் கீண்ட காளமேகத் திருவுருவனே! | கள்வன் என்று கூறாதே | கள்ளனென்று கூற வேண்டியிருக்க அங்ஙனம் கூறாமல் |
| மண்தலத்தோர் | பூமியிலுள்ளவர்கள், | உனை | ஸர்வஸ்வாமியான வுன்னை |
| பண்டே உன் தொண்டு ஆம் பழ உயிரை | அநாதி காலமாகவே உனக்கு அடிமைப்பட்டிருப்பதாகிய அநாதியான ஆத்மாவை | கச்சி | காஞ்சீபுரியிலே |
| | | கள்வா என்று ஓதுவது | கள்வனே! என்றழைப்பதானது |
| என்னது என்று கொண்டேனை | எனக்கே உரித்தென்று கருதியுள்ள என்னை | என் கண்டு | என்ன காரணங் கண்டோ? |

* * * "யோ஽ந்யதா ஸந்தமாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே, கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேண ஆத்மாபஹாரிணா" என்கிறபடியே ஆத்மாபஹாரக் கள்ளனாகிய என்னைக் கள்ளனென்று கூறாதே உன்னைக் கள்வனென்று கூறுவது எதனாலென்று வினவியுள்ளார்; இந்த வினாவுக்கு விடை கூறுவாராரோ? 'அடியார்

களது உள்ளத்தை அவர்களறியாதபடி கவர்வதனல் என்னைக் கள்ளனென்கிரூர்கள்' என்று எம்பெருமான் விடைகூற வேணுமென்று கருத்து. ... ... (85)

### 13. பவளவண்ணம்.

**கண்டறிந்துங் கேட்டறிந்துங் தொட்டறிந்துங் காதலால்**
**உண்டறிந்தும் மோந்தறிந்து முய்யேனே—பண்டைத்**
**தவளவண்ணு கார்வண்ணு சாமவண்ணு கச்சிப்**
**பவளவண்ணு நின்பொற் பதம்.** (86)

| | | | |
|---|---|---|---|
| பண்டை | கிருதயுகமாகிய பழைய காலத்தில் | காதலால் | பக்தியோடு |
| தவளம் வண்ணு | பால்போல் வெண்ணிற மானவனே ! | கண்டு அறிந்தும் | கண்களால் ஸேவித்துணர்ந்தும் |
| கார் வண்ணு | மேகத்தின் தன்மையை யுடையவனே ! | கேட்டு அறிந்தும் | காதுகளால்கேட்டுணர்ந்தும் |
| சாம வண்ணு | இயற்கையில் கரு நிற மான | தொட்டு அறிந்தும் | மெய்யினுல் ஸ்பரிசித்துணர்ந்தும் |
| கச்சி பவள வண்ணு | காஞ்சீபுரத்தில் பவள வண்ணப்பதியிலுறை பவனே ! | உண்டு அறிந்தும் | வாயினுல் புஜித்துணர்ந்தும் |
| | | மோந்து அறிந்தும் | மூக்கினுல் மோந்துணர்ந்தும் |
| நின் பொன் பதம் | உனது அழகிய திருவடிகளை | உய்யேன் | ஈடேறுகின்றேனில்லையந்தோ ! |

* * * *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா* என்று கீதையில் சொன்னபடியும் * உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனெம்பெருமானென்றே ஆழ்வாரிருந்தபடியும் பஞ்சேந்திரியங்களாலும் எம்பெருமானையே அநுபாவ்யனுகக் கொண்டு வாழவேண்டியிருந்தும் அங்ஙனம் வாழப்பெருது * கண்டு கேட்டுற்று மோந்துண்டுழலுமைங் கருவிகண்ட சிற்றின்பங்களையே நுகர்ந்து கெட்டுப் போகின்றேனே ! என்று அநுதாபந் தோற்றக் கூறியபடி. ... ... (86)

### 14. பரமேச்சுர விண்ணகரம்—வைகுண்டபெருமாள்ஸன்னிதி.

**பதத்தமிழால் தன்னையே பாடுவித்தென் னைந்தன்**
**பதத்தடியார்க் கேயாட் படுத்தான்—இதத்த**
**பரமேச் சுரவிண் ணகரான் பலவான்**
**வரமேச் சுரலணைந்த மால்.** (87)

| | | | |
|---|---|---|---|
| பல ஆன் வர | பல பசுக்கள் ஒருங்கு திரண்டுவர | பதம் தமிழால் | பக்குவமாயிருந்துள்ள தமிழ்ப்பாடல்களினுல் |
| மேச்சு | அவற்றையெல்லாம் மேய்த்தவனுயும் | தன்னையே பாடுவித்து | (நரஸ்துதி செய்வியாமல்) தன்னையே பாடுவித்து |
| உரல் அணைந்த மால் | உரலோடு கட்டக் கட்டுண்டிருந்தவனுயுமுள்ள திருமாலாகிய | என்னை தன் பதத்து அடியார்க்கே ஆள் படுத்தான் | என்னை பாகவதர்களுக்கே சேஷப் படுத்தி வைத்தான். |
| இதத்த பரமேச்சுர விண்ணகரான் | ஹிதபரனுன பரமேச்சுர விண்ணகரத் தலத்தெம்பெருமான் | | |

மேய்த்து என்பது மேச்சு எனமருவிற்று. (ஐந்து) அஞ்சு என்பது போல. (87)

## 15. திருப்புட்குழி

**மால்வே ழமுமரவும் மாயையும்வெற் புங்கடலும்**
**மேல்வீழ் படையும் விடமும்போய்ப்—பாலன்**
**நெருப்புட் குழிகுளிர நின்றதுங்கேட் டோதார்**
**திருப்புட் குழியமலன் சீர். (88)**

| | | | |
|---|---|---|---|
| மால் வேழமும் | (ப்ரஹ்லாதனைக் கொல்வதற்கு இரணியன் ஏவின) பெரிய மத யானைகளும் | போய் | ஒருவிதமான பாதையும் செய்யமுடியாமல் வலியொடுங்கிப்போக, |
| அரவும் | பெரிய பாம்புகளும் | பாலன் | சிறுக்கனாகிய ப்ரஹ்லாதாழ்வான் |
| மாயையும் | பலவகைப்பட்ட மாயைகளும் | குழி உள் நெருப்பு குளிர நின்றது | பள்ளத்திலே மூட்டிய நெருப்புச் சுடாமல் குளிரும்படி நின்றதை |
| வெற்பும் | மலையும் | | |
| கடலும் | சமுத்திரமும் | கேட்டும் | கேட்டிருந்தும் |
| மேல் வீழ் படையும் | மேல் விழுகின்ற வாட்படை முதலிய ஆயுதங்களும் | திருப்புட்குழி அமலன் சீர் | திருப்புட்குழிப் பெருமாளுடைய சிறப்புக்களை |
| விடமும் | விஷமும் | ஓதார் | இவ்வுலகத்தவர்கள் செப்பமாட்டாரந்தோ! |

பகவத் பக்தர்களில் தலைவனாயிருந்த ப்ரஹ்லாதாழ்வான் தன் தந்தை செய்வித்த சூழ்ச்சியினால் தோன்றிய பலவகை யாபத்துக்களினின்று தப்பியதைக் கேட்டிருந்தும் உலகத்தவர்கள் ஆபத்பந்துவான அப்பெருமானது திருக்குணங்களைச் சிந்தித்து உய்யாமல் அழிகின்றனரே! இது என்ன பேதைமை! என்று நிர்வேதம் காட்டியவாறு. ப்ரஹ்லாத ரக்ஷகனும் திருப்புட்குழித்திருமாலும் ஒருவனே யென்கை.

## 16. திருநின்றவூர்

(பெண்மை யெய்திப் பேசும் பாசுரம்)

**சீரறிந்து தோழிமீர் சென்று கொணர்ந்தெனக்குப்**
**போர முலைமுகட்டிற் பூட்டுமினோ—நேரவுணர்**
**பொன்றவூர் புட்கழுத்திற் பொன்னைமா ணிக்கத்தை**
**நின்றவூர் நித்திலத்தை நீர். (89)**

| | | | |
|---|---|---|---|
| தோழிமீர் | எனது தோழியர்களே! | நின்றவூர் நித்திலத்தை | திருநின்றவூர்ப்பதியிலுறையும் முத்துப் போன்றவனை |
| நீர் | நீங்கள் | | |
| நேர் அவுணர் பொன்ற | எதிர்த்துப் பொருத அசுரர்கள் அழியும்படி | சீர் அறிந்து | அவனது சிறப்பையுணர்ந்து |
| ஊர் | ஏறி நடத்துகின்ற | | |
| புள் | பக்ஷிராஜனுடைய | சென்று | போய்க் கிட்டி |
| கழுத்தில் | தோளிலே | கொணர்ந்து | கொண்டுவந்து |
| பொன்னை | பொன் போல் விளங்குபவனும் | எனக்கு போர | எனக்கு த்ருப்தியுண்டாகும்படி |
| மாணிக்கத்தை | மாணிக்கம்போன்றவனுமாகிய | முலை முகட்டில் | எனது தனங்களின் நுனியில் |
| | | பூட்டுமின் | சேர்ப்பியுங்கள். |

திருநின்றவூர்ப் பத்தராவிப்பெருமாளைக் கூடிப்பிரிந்த தலைவி பிரிவாற்றாமையால் நோவுபட்டு நாணந்துறந்து 'அப்பெருமானையும் என்னையும் ஸம்ச்லேஷிப்பிக்க வேண்டியது உங்கள் கடமை' என்று தோழியர்க்கு உரைத்த பாசுரமிது. நித்திலம்-முத்து.

17. திருவெவ்வுளூர்.

**நீர்மைகெட வைதாரும் நின்னோ டெதிர்த்தாரும்**
**சீர்மைபெற நின்னடிக்கீழ்ச் சேர்கையினால்—நேர்மையிலா**
**வெவ்வுளத்த னேன்செய் மிகையைப் பொறுத்தருளி**
**யெவ்வுளத்த னேநீ யிரங்கு. (90)**

| | | | |
|---|---|---|---|
| எவ்வுள் அத்தனே நீ | திருவெவ்வுளூர்த் தலைவனே ! நீ, | நின் அடி கீழ் சேர்கையினால் | உனது திருவடிக்கே வந்து சேர்வதனால், |
| நீர்மை கெட | தமது தன்மை அழியும்படி | நேர்மை இலா வெம் உள்ளத்தனேன் | குணக்கேடனாய்க் கொடிய சிந்தையையுடையேனான நான் |
| வைதாரும் | உன்னை நிந்தித்தவர்களும் | செய் மிகை | செய்த குற்றங்களையும் |
| நின்னோடு எதிர்த்தாரும் | உன்னை யெதிர்த்துப் போர் செய்தவர்களும் | பொறுத்து அருளி | க்ஷமித்தருளி |
| (தாங்கள் செய்த அபசாரத்தினால் அழிந்து போகாமல்) | | இரங்கு | என்பால் க்ருபை செய்ய வேணும். |
| சீர்மை பெற | சிறப்பு அடையும்படி | | |

"வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும் மாறில்போர், செய்து நின்ன சேற்றத்தீயில் வெந்தவர்க்கும் வந்துனை, எய்தலாகுமென்பர் ஆதலால் எம்மாய! நாயினேன், செய்தகுற்றம் நற்றமாகவே கொள் ஞால நாதனே!" என்கிற திருச்சந்த விருத்தப் பாசுரத்தின் சாயலாகவே இச்செய்யுளுள்ளது. .... .... (90)

18. திருநீர்மலை.

**இரங்கு முயிரனைத்து மின்னருளால் காப்பான்**
**அரங்க னொருவனுமே யாதல்—கரங்களால்**
**போர்மலைவான் வந்த புகழ்வாணன் காட்டினான்**
**நீர்மலைவா ழெந்தையெதிர் நின்று. (91)**

| | | | |
|---|---|---|---|
| இரங்கும் உயிர் அனைத்தும் | வருந்துகின்ற ஸகலப் பிராணிகளையும் | போர் மலைவான் வந்த | போர் புரியும்படி வந்த |
| இன் அருளால் காப்பான் | தனது பரமகிருபையினால் காத்தருள்பவன் | புகழ் வாணன் | பிரசித்திபெற்ற பாணாசுரன் |
| அரங்கன் ஒருவனுமே ஆதல் | ஸ்ரீரங்கநாதனொருவனே யாவனென்னும் விஷயத்தை, | நீர்மலை வாழ் எந்தை எதிர் நின்று | திருநீர்மலைப் பதியில் வாழ்பவனான நாராயணமூர்த்தியை எதிரிட்டு நின்று |
| கரங்களால் | தனது ஆயிரங் கைகளினாலும் | காட்டினான் | நிரூபித்தான். |

பாணாஸுரன் தான் ரக்ஷகபுத்தி பண்ணியிருந்த கார்த்திகையானும் கரிமுகத்தானும் கனலும் முக்கண்மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு ஓட, தான் கைகளறுப்புண்டு நின்று அருள்பெற்றபோது ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே ஸர்வ ரக்ஷகனென்று உணரப்பெற்றானென்றவாறு. .... ... .... (91)

19. திருவிடவெந்தை

**நின்று திரியும் பிறவியெல்லாம் நேர்வித்துக்**
**கொன்று திரியுங் கொடுவினையார்—இன்று**
**வெருவிட வெந்தைக்கே விழுமியதொண் டானேன்**
**திருவிடவெந் தைக்கே செறிந்து. (92)**

| | | | |
|---|---|---|---|
| நின்று திரியும் பிறவி எல்லாம் நேர்வித்து | ஸ்தாவரமும் ஜங்கமுமாகிய எல்லாப் பிறவிகளையும் எனக்குண்டாக்கி | இன்று வெருவிட | இப்போது அஞ்சியோடும்படியாக |
| கொன்று திரியும் | என்னை நலிந்து திரிகின்ற | திருஇடவெந்தைக்கே செறிந்து | (யான்) திருவிடவெந்தைப் பதியில் நெருங்கி |
| கொடு வினையார் | மிகக் கொடிய தீவினைகள் | எந்தைக்கே விழுமிய தொண்டு ஆனேன் | அத்தலத்துப்பெருமானாகிய நித்யகல்யாணநாதனுக்கே சிறந்த தொண்டனாயினேன். |

"நின்று திரியும் பிறவி"—நிற்கும் பிறவி, திரியும் பிறவி என்று யோஜிப்பது. மலை, மரம் முதலியனவாகப் பிறத்தல் நிற்கும் பிறவி; பசுபக்ஷி மநுஷ்யாதிகளாய்ப் பிறத்தல் திரியும் பிறவி. "வாசிகை: பக்ஷிம்ருகதாம் மாநஸை ரந்த்யஜாதிதாம், சரீரஜை: கர்ம தோஷைர் யாதி ஸ்தாவரதாம் நர:" என்ற பிரமாணம் இங்கே நினைக்கத்தகும். .... .... .... .... .... (92)

## 20. திருக்கடன்மல்லை.

**செறிந்த பணைபறித்துத் திண்களிற்றைச் சாடி**
**முறிந்துவிழப் பாகனையும் மோதி—யெறிந்து**
**தருக்கடன்மல் லைக்குமைத்தான் தஞ்சமென நெஞ்சே**
**திருக்கடன்மல் லைக்குள் திரி. (93)**

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | எனது மனமே!, | தருக்கு அடல் மல்லை | செருக்கையும் தேஹபலத்தையுமுடைய மல்லர்களை |
| செறிந்த பணை பறித்து | நெருங்கியுள்ள தந்தங்களைப் பிடுங்கி (அவற்றைக் கொண்டே) | குமைத்தான் | பொருது கொன்ற திருமாலே |
| திண் களிற்றை சாடி | (கம்ஸனது) மதயானையை அடித்துக்கொன்று | தஞ்சம் என | ரக்ஷகனென்று அத்யவஸித்து |
| பாகனையும் முறிந்து விழ மோதி எறிந்து | அவ்வானைப் பாகனையும் இறந்தொழியும்படி அடித்துத் தள்ளி | திருக்கடல் மல்லைக்குள் திரி | திருக்கடல்மல்லைப் பதியிற்சென்றுதிரிவாயாக. |

## 21. திருவல்லிக்கேணி.

**திரிந்துழலுஞ் சிந்தைதனைச் செவ்வே நிறுத்திப்**
**புரிந்து புகன்மின் புகன்றால்—மருந்தாங்**
**கருவல்லிக் கேணியாம் மாக்கதிக்குக் கண்ணன்**
**திருவல்லிக் கேணியான் சீர். (94)**

| | | | |
|---|---|---|---|
| திரிந்து உழலும் சிந்தை தனை | விஷயாந்தர வாஞ்சைகளில் சென்று அலைகின்ற உங்கள் மனத்தை | புகன்றால் | அங்ஙனம் பாடினால் (அது) |
| செவ்வே நிறுத்தி | அவ்வாறு செல்லவொட்டாமல் நேர்பட நிறுத்தி | கரு வல்லிக்கு மருந்து ஆம் | கர்ப்பமாகிய கொடியை யழிக்கும் மருந்தாகும்; |
| திருவல்லிக்கேணியான் கண்ணன் சீர் புரிந்து புகன்மின் | திருவல்லிக் கேணியிலுறையும் வேங்கட க்ருஷ்ணனுடையகீர்த்திகளை விரும்பிப் பாடுங்கள்: | மா கதிக்கு ஏணி ஆம் | சிறந்தமோக்ஷபதவியை அடைவிப்பதாகும். |

22. திருக்கடிகை. [சோளசிங்கபுரம்]

**சீரருளால் நம்மைத் திருத்திநாம் முன்னறியாக்**
**கூரறிவும் தந்தடிமை கொண்டதற்கே—நேரே**
**ஒருகடிகை யும்மனமே உள்ளுகிலாய் முத்தி**
**தருகடிகை மாயவனைத் தான்.** (95)

| | | | |
|---|---|---|---|
| மனமே | நெஞ்சமே!, | முத்தி தரு கடிகை மாயவனை | மோக்ஷ ப்ரதனான திருக்கடிகைத் தலத்தெம் பெருமானை |
| சீர் அருளால் | பரம க்ருபையினால் | நேரே | நேராக |
| நம்மை திருத்தி | நம்மை நல்வழிப்படுத்தி | ஒரு கடிகையும் | ஒருநாழிகைப் பொழுதாவது |
| நாம் முன் அறியா கூர் அறிவும் தந்து | நாம் இதற்கு முன்னே பெற்றறியாத நுட்பமான மதியையும் தந்து | உள்ளுகிலாய் | நீ நினைக்க மாட்டாயந்தோ! |
| அடிமை கொண்டதற்கு | நம்மை ஆட்கொண்டதற்காக, | | |

சோளஸிம்ஹ புரத்திற்குக் கடிகாசலமென்று திருநாமம். கடிகா—நாழிகை: ஒருவர் ஒரு நாழிகைகாலம் இத்தலத்திலுறைந்தாலும் அவர்க்கு முக்திஸித்தியாகுமென்பதுபற்றி இத்திருநாமமாயிற்றென்று புராணங்கூறும். ... .... (95)

தொண்டை நாட்டுத் திருப்பதிகள் முற்றிற்று.

---

## தொண்டை நாட்டுத் திருப்பதிகளுக்கு ஆழ்வார்பாடல் குறிப்பு.

74. **திருக்கச்சி யத்திகிரி.** (இருவர் பாடல்.) **பூதத்தாழ்வார்.** (95))* என்னெஞ்சமே யான்—உலகேத்து மாழியா னத்தியூரான். * (96) * அத்தியூரான் புள்ளையூர்வான்.* **திருமங்கை.** பெ. தி. 2—9 3. * உரந்தரு.......வரந்தரு மாமணிவண்ணனிடம். * (விசேஷக் குறிப்பு.) காஞ்சீ என்னும் வடமொழிப் பெயர்க்குத் திரிபான கச்சியென்னுஞ் சொல் நான்முகக்கடவு ளாராதித்த இடமான அத்திகிரியையே சொல்லக் கடவதாதலால் கச்சியென வருமிடங்களிலெல்லாம் இத்தலத்திற்கு மங்களாசாஸனமாகவே கொள்ளத்தகும்.



75. **அட்டபுயகரம்.** (இருவர் பாடல்.) **பேயார்.** 99. * தொட்டபடை—அட்டபுயகரத்தான் * **திருமங்கை.** பெ. தி. 1—8....5. * வண்கையா னவுணர்க்கு....... எண்கையான்.* 2 - 8. * திரிபுர மூன்று - பதிகம். பெரியமடல். * அட்டபுய கரத்தம்மானேற்றை.



76. **திருத்தண்கா.** (ஒருவர்பாடல்.) **திருமங்கை.** பெ. தி. 10—1—2. * பொன்னைமா மணியை ...யாஞ்சென்று காண்டும் தண்காவிலே. * திருநெடும். (14.) * முளைக்கதிரை....விளக்கொளியை மரகதத்தைத் திருத்தண்காவில். *

77. **வேளுக்கை.** (இருவர் பாடல்.) **பேயார்.** 26. * சிறந்தவென்...வேளுக்கைப்பாடியுமே. * (34) * அன்றிவ்வுலகம் ...வேளுக்கை நீணகர்வாய். * (32). * விண்ணகரம் வெஃகா....மாமாட வேளுக்கை. * **திருமங்கை.** பெரியமடல் * மன்னுமதிட்கச்சி வேளுக்கையாளரியை. *

78. **பாடகம்.** (ஐவர் பாடல்.) **பூதத்தார்.** 64. * உற்று வணங்கி....பூம்பாடகத்துளிருந்தானை. * **பேயார்.** 30. * சேர்ந்த திருமால்....வாய்ந்தமறை பாடகம். * 64. * இசைந்த வரவமும்....கச்சியிருந்து. * **திருமழிசை.** திருச்சந். 63. * நன்றிருந்து........ குன்றிருந்த மாடநீடு பாடகத்தும். * 64. * நின்றதெந்தை....இருந்ததெந்தை பாட

கத்து. * நம்மாழ். திருவாய். 5—10—6. * நின்றவாறும் இருந்தவாறும். * திருமங்கை. பெ. தி. 6-10-4. * கல்லார்மதிள்....கச்சிநகருள் நச்சிப்பாடகத்துள். * திருநெடுந். 15. * கல்லுயர்ந்த....கச்சிமேய களிறு. *

79. நீரகம். (ஒருவர் பாடல்.) திருமங்கை. திருநெடும். 8. நீரகத்தாய்.

80. நிலாத்திங்கள்துண்டம். (ஒருவர் பாடல்.) திருமங்கை. திருநெடும். 8. நீரகத் தாய்....நிலாத்திங்கள் துண்டத்தாய்.

81. ஊரகம்- (நால்வர் பாடல்.) பேயார். 64. * இசைந்த வரவமும்....கச்சி நின்றது. * திருமழிசை. திருச்சந். 63. * நன்றிருந்து....ஊரகத்து நின்றது. * நம். திருவாய். 5—10—6. நின்றவாறும். திருமங்கை. பெ. தி. 1—5—4 * ஊரகத். * சிறியமடல். * மதிள்கச்சி யூரகமே. * பெரியமடல். * ஊரகத்து என்னவனை. * திரு நெடுந். 8. நீரகத்தாய்....கச்சியூரகத்தாய். * 13. * கல்லெடுத்து....கச்சியூரகத்தாய் *

82. திருவெஃகா. (ஐவர் பாடல்.) பொய்கை. 77. * வேங்கடமும்....வெஃகாவும் * பேயார். 26. சிறந்தவென்....வெஃகாவும். * 34. * அன்றிவ்வுலகம்....கிடந்தானை. * 62. * விண்ணகரம் வெஃகா. * 64. * இசைந்த வரவமும....கச்சிவெஃகாவில் * 76. * பொருப்பிடையே...விருப்புடைய வெஃகாவே. * திருமழிசை. திருச்சந். 63. * நன் றிருந்து....வெஃகணைக்கிடந்தது. * 64. நின்றதெந்தை........வெஃகணைக்கிடந்தது. * நான்முகன். 36. * நாகத்தணை....வெஃகா. * நம். திருவி - 26. நானிலம்....கண்ணன் வெஃகாவுது. * திருவாய். 5—10...6. * நின்றவாறும்....கிடந்தவாறும் * திருமங்கை. பெ. தி. 2—6—5. * பிச்சச்சிறு....கச்சிக்கிடந்தவன். * 10—1—7. * கூந்தலார்........ சென்று காண்டும் வெஃகாவுளே. * சிறியமடல். * பேராமருது....வெஃகாவே. * பெரியமடல் * வெஃகாவிலுன்னிய யோகத்துறக்கத்தை. * திருநெடுந். 8. * நீரகத் தாய்...வெஃகாவுள்ளாய்.* 9. * வங்கத்தால்....மதிட்கச்சியூராய். * 13- * கல்லெடுத்து. வெஃகாவில் துயிலமர்ந்த * 14, * முளைக்கதிரை....வெஃகாவில் திருமாலை.

83. காரகம். (ஒருவர் பாடல்.) திருமங்கை. திருநெடுந். 8. * நீரகத்தாய்.......

84. கார்வானம். (ஒருவர் பாடல்.) திருமங். திருநெ. 8. * நீரகத்....கார்வானத் துள்ளாய். *

85. கள்வனூர். (ஒருவர் பாடல்.) திருமங். திருநெ. 8. * நீரகத்...கள்வா. *

86. பவளவண்ணம். (ஒருவர் பாடல்.) திருமங். திருநெ. 9. * வங்கத்தால்... பவளவண்ணா. *

87. பரமேச்சுர விண்ணகரம். (ஒருவர் பாடல்.) திருமங். பெதி. தி. 2-9. *சொல் லுவன் - பதிகம்.

88. திருப்புட்குழி, (ஒருவர் பாடல்.) திருமங். பெ. தி. 2—7—8. * அலங்கெழு.... புட்குழிபாடும். * பெரிய மடல். * புட்குழியெம் போரேற்றை. *

89. திருநின்றவூர், (ஒருவர் பாடல்.) திருமங். பெ. தி. 2—5—2. * பூண்டவத் தம்....நின்றவூர் நித்திலத்தை. * 7—10—5. * ஏற்றினை யிமயத்துள்....நின்றவூர் நின்ற நித்திலத் தொத்தினை. *

90. திருவெவ்வுள். (இருவர் பாடல்.) திருமழிசை. நான்மு. 36. * நாகத்தணை.... திருவெவ்வுள். * திருமங். பெ. தி. 2—2. * காசையாடை - பதிகம். பெரியமடல். * * என்னுடைய வின்னமுதை யெவ்வுள் பெருமலையை. *

91. திருநீர்மலை. (இருவர் பாடல்.) பூதத்தார். 46. * பாலின் றதரங்கம்....அணி நீர்மலையே. * திருமங். பெ. தி. 2—4. * அன்றுயர்-பதிகம். 2—7—8. * அலங்கெழு.... போதுமோ நீர்மலைக்கு * 5—2—8. * கலைவாழ்....திருநீர்மலை வாழெந்தை. * 6—8—4. * ஓடாவரியாய்...திருநீர்மலையானே. * 7—1—7. * கதியேலில்லை....திருநீர்மலை நித்திலத் தொத்தே. * 8—2—3. * அருவிசோர்....நீர்மலையென்று. * 9—2—8. * மஞ்சுயர் மாமதி தீண்ட....நீர்மலையார்கொல். * 10—1—1. * ஒருநல்...நீர்மலை யின்றுபோய். * சிறிய மடல். * ஏரார்பொழில் ...நீர்மலை. * பெரியமடல். * நீர்மலைமேல் * திருநெடுந். 18. * கார்வண்ணம்...நீர்வண்ணன் னீர்மலைக்கே. *

92. திருவிடவெந்தை. (ஒருவர் பாடல்.) திருமங். பெ. தி. 1—8—4. * பார்த்தற்கா யன்று...இடவெந்தை மேவிய வெம்பிரான். * 2—7. * திவளும்வெண்மதி - பதிகம். சிறியமடல். * ஏரார்பொழில் சூழிடவெந்தை. * பெரியமடல். * என்மனத்து மாலையிட வெந்தையீசனை. *

93. திருக்கடன்மல்லை. (இருவர் பாடல்.) பூதத்தார். 70. * தமருள்ளம்தஞ்சை... மாமல்லை. * திருமங். பெ. தி. 2—5. * பாராயதுண்டு - பதிகம். 2—6. * நண்ணு தவாள் - பதிகம். 3—5—8. * சங்குதங்கு தடங்கடல் கடன்மல்லையுள் கிடந்தாய். * 7—1—4. * புள்வாய் பிளந்த....கடன்மல்லைக்கிடந்த கரும்பே. * திருக்குறு. 19. * பிண்டியார்... மல்லையென்று மண்டினுர். * சிறியமடல். * காரார் குடந்தை கடிகைகடன்மல்லை. * பெரியமடல்' * மன்னுங் கடன்மல்லை மாயவனை. * திருநெடு. 9. * வங்கத்தால் மாமணி வந்துந்து முந்நீர் மல்லையாய். *

94. திருவல்லிக்கேணி. (மூவர் பாடல்.) பேயார். 16. * வந்துதைத்த...திருவல்லிக் கேணியான் சென்று. * திருமழிசை. நான்மு. 35. * தாளா லுலகம்...மாமயிலை மாவல்லிக் கேணியான். * திருமங்கை. பெ. தி. 2—3. * விற்பெரு விழவும் - பதிகம்.

95. திருக்கடிகை. (இருவர் பாடல்.) பேயார். 61. * பண்டெல்லாம்...வண்பூங் கடிகை. * திருமங். பெ. தி. 8—9—4. * மிக்கானை...தக்கானைக் கடிகை. * 8—9—9. * கண்ணூர் கண்ணபுரம் கடிகை. * சிறியமடல். * காரார் குடந்தை கடிகை. *

தொண்டை நாட்டுத் திருப்பதிகட்குப் பாடல் குறிப்பு முற்றிற்று.

---

## வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டு.

### 1. திருவேங்கடம்.

**தானே சரணமுமாய்த் தானே பலமுமாய்த்**
**தானே குறைமுடிக்குந் தன்மையான்—தேனேய்**
**திருவேங் கடம்தொழுதேம் தீய விபூதிக்குள்**
**மருவேங் கடந்தனெமிவ் வாழ்வு. (96)**

| | | | |
|---|---|---|---|
| **தானே சரணமும் ஆய்** | தானே உபாயமாகியும் | தேன் ஏய் திரு வேங்கடம் | தேன் நிறைந்த சோலை சூழ்ந்த திருவேங்கடப் பதியை |
| **தானே பலமும் ஆய்** | தானே உபேயமாகியும் | தொழுதேம் | வணங்கினோம் ; |
| | | தீய விபூதிக்குள் மருவேம் | (வணங்கின தன்பயனுக) கொடியவிந்த ஸம் ஸார நிலத்தில் இனிப் பொருந்த மாட்டோம் ; |
| **தானே குறை முடிக்கும் தன் மையான்** | அடியார்களது குறை களையும் தானே தீர்ப் பவனுகியுமிருக்கின்ற திருவேங்கடமுடையா னுடைய | இ வாழ்வுகடந்தனெம் | இந்த ஸம்ஸார வாழ்க் கையை இனிக்கடந்து விட்டோம். |

## 2. சிங்கவேள் குன்றம்.

**வாழ்குமரன் மேற்கனக வஞ்சகன்மே லோர்முகத்தே**
**சூழ்கருணை யும்முனிவுந் தோன்றியவால்—கேழ்கிளரும்**
**அங்கவேள் குன்றத் தழல்சரபத் தைப்பிளந்த**
**சிங்கவேள் குன்றத் திஞர்க்கு. (97)**

| | | | |
|---|---|---|---|
| கேழ் கிளரும் அங்கம் வேள் குன்ற | நிறம் விளங்குகின்ற அழகிய தேஹத்தை யுடைய மன்மதன் சாம்பலாகி யொழியும் படி | சிங்கவேள் குன்றத்திஞர்க்கு | சிங்கவேள் குன்றத்தெம் பிரானுக்கு |
| அழல் | (தனது நெற்றிக் கண்ணைத்திறந்து) கோபித்த | வாழ் குமரன் மேல் | வாழப் பிறந்த ப்ரஹ்லாதன்மீது |
| சரபத்தை | சிவனது தோற்றமான சரபமென்னும் விலங்கை | ஓர் முகத்து | ஒருபுறத்து |
| பிளந்த | பிளந்தொழித்த | சூழ் கருணையும் | நிறைந்த பேரருளும் |
| | | கனகம் வஞ்சகன்மேல் | வஞ்சகனான இரணியன் மீது |
| | | (ஓர் முகத்து) முனிவும் | ஒருபால் சீற்றமும் |
| | | தோன்றின | உண்டாயின. |

சரபம்—இரண்டு தலைகளையும் சிறகுகளையும் கூரிய நகமுள்ள எட்டுக்கால்களையும் மேல்நோக்கிய கண்களையு முடையதொரு மிருகவிசேஷம். இதனைப் பறவையென்றலுமுண்டு. சிங்கத்தை யெளிதிற் கொல்லவல்லது. தூணினின்று தோன்றியது வெறுஞ்சிங்கமன்றி நரசிங்கமாதலாலும், அபரிமித சக்திவாய்ந்த புருஷோத்தம திவ்ய ஸிம்மமாதலாலும் இது சரபத்தைக் கொன்றிட்டது. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "சம்புர் பவந் ஹி சரபச் சலபோ பபூவ" என்றருளிச் செய்ததுங் காண்க. .... .... .... ... .... .... (97)

## 3. திருவயோத்தி.

**ஆர்க்குமிது நன்றுதீ தானலும் நெஞ்சேநீ**
**பார்க்கும் பலகலையும் பன்னுதே—சீர்க்குந்**
**திருவையோத் திப்புயலைச் சீரியமெய்ஞ் ஞானத்**
**துருவையோத் திற்பொருளை யோர். (98)**

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | எனது மனமே ! | சீரிய மெய் ஞானத்து உருவை | சிறந்த தத்துவ ஞான ஸ்வரூபியானவனும் |
| இது | இப்போது யான் சொல்லும் விஷயம் | ஓத்தின் பொருளை | வேதத்தின் பொருளாயிருப்பவனுமான |
| ஆர்க்கும் நன்று | யாவர்க்கும் ஹிதமானது | சீர்க்கும் திருஐயோத்திபுயலை | சிறந்த திருவயோத்தியிலுறைகின்ற காளமேக ச்யாமளனை இராமபிரானை |
| தீது ஆனாலும் | ஒருகால் ஹிதமன்றிக்கே அஹிதமானாலும் | ஓர் | தியானிக்கக்கடவை. |
| பார்க்கும் பல கலையும் நீ பன்னாது | பார்க்கப்படுகின்ற பல வகை சாஸ்திரங்களையும் நீ கண்டபடி கற்காமல் | | |

"வெள்ளியார் பிண்டியார் போதியாரென்றிவ ரோதுகின்ற கள்ளநூல்தன்னையும் கருமமன்றென்று உய்யக் கருதினையேல்" என்கிற திருமங்கையாழ்வாரருளிச் செயலையுட்கொண்டு, வீண்வம்பு நூல்களை யோதிப் போதைப் பாழாக்காமே அயோத்யாதிபதியான ஸ்ரீராமபிரானையே சிந்தனை செய்யச் சிந்தைக்கு உணர்த்தினாராயிற்று. .... .... .... .... .... ... (98)

### 4. நைமிசாரணியம்.

**ஓரறிவு மில்லாத வென்போல்வார்க் குய்யலாம்**
**பேரறிவுண் டேனும் பிறர்க்கரிது—பாரறிய**
**நைமிசா ரண்ணியத்து நாதரடி யாரோடும்**
**இம்மிசார் வுண்டா யினால்.** (99)

| | | | |
|---|---|---|---|
| பார் அறிய | உலகத்தார் அறியும்படி | உய்யல் ஆம் | ஈடேறுதல் கூடும்; |
| நைம்மிசாரண்ணியத்து நாதர் அடியாரோடும் | நைமிசாரண்ய ஸ்தலத்தின் ஸ்வாமியினுடைய பக்தர்களோடு | பிறர்க்கு | அவ்வாறு பாகவத ஸம்பந்தம் பெறாத மற்றையோர்க்கு |
| இம்மி சார்வு உண்டாயினால் | க்ஷணகாலமாவது சேர்க்கை ஏற்படுமாயின் | பேர் அறிவு உண்டேனும் | விசேஷ ஞானம் உளதாயினும் |
| ஓர் அறிவும் இல்லாத | சிறிதேனும் விவேகமில்லாத | | |
| என் போல்வார்க்கு | என்னைப் போன்றவர்கட்கும் | அரிது | ஈடேறுதல் கைகூடாததாம். |

*** வீடு பெறுதற்குக் காரணம் தத்வஜ்ஞான மென்பதை "ஜ்ஞாநாத் முக்தி:, அஜ்ஞாநாத் ஸம்ஸார:" இத்யாதி ப்ரமாணங்கள் பேசிவைத்தாலும் அதற்கும் மூல காரணம் ஸத்ஸங்கமேயாதலால் அதனையே உஜ்ஜீவந ஹேதுவாக இப்பாட்டில் வெளியிட்டாராயிற்று. .... ... .... ... ... (99)

### 5. சாளக்கிராமம்.

**உண்டா முறைமை யுணர்ந்தடிமைப் பேர்பூண்டேன்**
**பண்டாங் குடிகுலத்தாற் பன்மதத்தால்—கொண்டாட்டால்**
**ஆளக் கிராமத்தால் அல்லற்பேர் பூணாமல்**
**சாளக் கிராமத்தார் தாட்கு.** (100)

| | | | |
|---|---|---|---|
| பண்டு ஆம் குடியால் | தொன்று தொட்டு வருகிற குடியினாலும் | அல்லல் பேர் பூணாமல் | துன்பத்திற்கு இடமாகிய பெயரை வைத்துக் கொள்ளாமல், |
| குலத்தால் | குலத்தினாலும் | | |
| பல் மதத்தால் | பல வகையாகவுள்ள மதங்களினாலும் | சாளக்கிராமத்தார் தாட்கு | ஸாளக்ராம பகவானது திருவடிகளோடு |
| கொண்டாட்டால் | தாம் தாம் செய்கிற தொழில் முதலியவற்றாலுண்டாகின்ற ஏற்றத்தினாலும் | உண்டாம் முறைமை | பொருந்திய ஸம்பந்தத்தை |
| | | உணர்ந்து | ஆராய்ந்து தெரிந்து கொண்டு |
| ஆள் அ கிராமத்தால் | உரிமைகொண்டு வஸிக்கிற தம் தமது கிராமத்தினாலும் | அடிமை பேர் பூண்டேன் | தாஸ்ய நாமத்தை வைத்துக்கொண்டேன். |

"ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்யோ நைவ க்ராமகுலாதிபி:, விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்யஸ் தஸ்ய ஸர்வம் ஸ ஏவ ஹி" என்றதை யுட்கொண்டு பாடியதிப்பாசுரம். "க்ராம குலாதிகளால் வரும்பேர் அநர்த்த ஹேது" என்ற ஸ்ரீவசநபூஷண ஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம். ... ... ... .... (100)

### 6. வதரியாச்சிரமம்.

தாட்கடிமை யென்று தமையுணரார்க் கெட்டெழுத்தும்
கேட்கவெளி யிட்டருளுங் கேசவனை—வேட்கையொடு
போவதரி தானலும் போய்த்தொழுவோம் நெஞ்சமே
மாவதரி யாச்சிர மத்து. (101)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | எனது மனமே ; | (இதற்கு "போய்த் தொழுவோம்" என்றதோடு அந்வயம்). | |
| தமை தாட்கு அடிமை என்று உணரார்க்கு | தங்களை பகவத் தாஸபூதர்களாக அறியப் பெறுத இவ்வுலகத்தவர்கட்கு | போவது அரிது ஆனாலும் | பதரிகாச்ரமயாத்திரை செய்வது சிரமமானாலும் |
| எட்டு எழுத்தும் | திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தை | மா வதரி ஆச்சிரமத்து | சிறந்த பதரிகாச்ரமஸ்தலத்தில் |
| கேட்க | காதில் படும்படி | | |
| வெளியிட்டு அருளும் | கருணையோடு வெளியிட்ட | வேட்கையொடு | பக்தியுடனே |
| கேசவனை | ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை | போய் தொழுவோம் | சென்று வணங்குவோம். |

* "தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்திரத்தை வெளியிட்டருளினவிடம் ஸ்ரீபதரிகாச்ரமஸ்தலமென்பது ப்ரஸித்தம். ... ... (101)

### 7. கண்டமென்னுங் கடிநகர்.

மத்தாற் கடல்கடைந்து வானோர்க் கமுதளித்த
அத்தா வெனக்குன் னடிப்போதில்—புத்தமுதைக்
கங்கைக் கரைசேருங் கண்டத்தாய் புண்டரிக
மங்கைக் கரைசே வழங்கு. (102)

| | | | |
|---|---|---|---|
| மத்தால் கடல் கடைந்து | மந்தரமலையாகிற மத்தினாலே கடலைக் கடைந்து | கங்கை கரை சேரும் கண்டத்தாய் | கங்கையின் கரைமேல் கை தொழ நின்ற கண்டமென்னும் கடி நகரிலுறையும் பெருமானே !, |
| வானோர்க்கு அமுது அளித்த | தேவர்களுக்குச் சாவா மருந்தாகிய அமுதத்தை யெடுத்துக் கொடுத்தருளின | உன் அடி போதின் புது அமுதை | உனது பாதாரவிந்தங்களில் தோன்றுகின்ற விலக்ஷணமான அம்ருதத்தை |
| அத்தா | ஸ்வாமியே, | | |
| புண்டரிகம் மங்கைக்கு அரைசே | செந்தாமரையாள் கேள்வனே !, | எனக்கு வழங்கு | அடியேனுக்கு அளித்திடு. |

"விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்று வேதங் கூறியபடி எம்பெருமானது பாதாரவிந்தத்தில் அமுதவெள்ள மிருப்பதறிந்து அதனைத் தமக்குத் தந்திட வேண்டினராயிற்று. ... (102)



### 8. திருப்பிருதி.

வழங்கு முயிரனைத்தும் வாரிவாய்ப் பெய்து
விழுங்குங் கவந்தன் விறல்தோள்—கிழங்கைப்
பொருப்பிருதிக் குங்கிடந்தாற் போல்துணித்து வீழ்த்தான்
திருப்பிருதிக் கென்னெஞ்சே செல். (103)

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சே | எனது மனமே !, | விறல் தோள் கிழங்கை | வலிமையுள்ள தோள்களின் மூல பாகத்தை |
| வழங்கும் உயிர் அனைத்தும் | ஸஞ்சரிக்கின்ற எல்லாப் பிராணிகளையும் | பொருப்பு இரு திக்கும் கிடந்தால் போல் | மலை இரண்டு பக்கங்களிலும் விழுந்து கிடந்தது போலக் கிடக்கும்படி |
| வாரி | தனது இரண்டு கைகளாலும் ஒரு சேரத் திரட்டி யெடுத்து | துணித்து வீழ்த்தான் | வெட்டித் தள்ளிய இராமபிரானெழுந்தருளியிருக்குமிடமான |
| வாய் பெய்து | தனது வாயினுள்ளே தள்ளி | திருப் பிருதிக்கு | திருப்பிருதி யென்னும் திவ்ய தேசத்திற்கு |
| விழுங்கும் | விழுங்குந் தன்மையுள்ள | செல் | நீ சென்று சேர்வாயாக. |
| கவந்தன் | கபந்தனென்னும் அரக்கனுடைய | | |

*** ஸ்ரீராமாவதாரத்தில் சபரியின் ஆச்ரமம் செல்வதற்கு முன்னடிக் கபந்த வதமுள்ளது. கபந்தன் தோள்களை யறுத்துத் தள்ளியது இளையபெருமாளேயாயினும் அதற்கு ப்ரேரகர் பெருமாளென்பதுபற்றி இச்செயலை ஸ்ரீராமனே செய்ததாக இங்குக் கூறியதில் பொருந்தாமையில்லை; சூர்ப்பணகா பங்கம்போல. ... (103)

## 9. வடமதுரை

செல்வ முயிருடம்பு சேர வுரித்தாக்கி
வல்வினையின் நீங்குமினோ மாந்தர்காள்—தொல்லை
வடமதுரை யான்கழலே வாய்த்ததஞ்ச மென்று
திடமதுரை செய்தான் திறத்து. (104)

| | | | |
|---|---|---|---|
| மாந்தர்காள் | மனிதர்களே !, | செல்வம் | நுமது செல்வங்களையும் |
| கழலே வாய்த்த தஞ்சம் என்று | 'எனது திருவடிகளே அனைவர்க்கும் வாய்ப்பான ரக்ஷகவஸ்து' வென்று | உயிர் | பிராணனையும் |
| | | உடம்பு | உடலையும் |
| | | சேர | ஒரு சேர |
| இடம் அது உரை செய்தான் | உறுதியாக உபதேசித்தவனை | உரித்து ஆக்கி | உரியனவாக ஸமர்ப்பித்து |
| தொல்லை வட மதுரையான் திறத்து | பழமையான வட மதுரைப் பதியிலுறையும் பெருமானிடத்து | வல் வினையின் நீங்குமின் | வலிய இருவினைத் தொல்லைகளினின்று நீங்குங்கள். |

## 10. துவரைப்பதி (த்வாரகை.)

திறந்திறமாத் தாம்துய்க்கும் தீஞ்சுவையை நாடி
அறந்திறம்பிப் பாதகரோ ரைவர்—நறுந்துளவ
மாதுவரை யோனே மனந்துணையாக் கொண்டென்னைக்
காதுவரை யோமெய் கலந்து. (105)

| | | | |
|---|---|---|---|
| நறுந் துளவம் | நறுமணமுள்ள திருத்துழாய் மாலையைத் தரித்த | நாடி | தேடிக்கொண்டு |
| | | அறம் திறம்பி | தருமமார்க்கத்தினின்று தவறி |
| மா துவரையோனே | பெருமை பெற்ற த்வாரகாபுரிக்கு நாதனே ! | மனம் துணை ஆ கொண்டு | எனது மனத்தைத் தமக்கு உற்றதுணையாகக் கைக்கொண்டு |
| பாதகர் ஓர் ஐவர் | மிகக் கொடிய பாதகங்களைச் செய்விக்கின்ற பஞ்சேந்திரியங்கள் | | |
| திறம் திறம் ஆ | விதம் விதமாக | மெய் கலந்து | எனது உடலிற் பொருந்தி |
| தாம் துய்க்கும் | தாம் அநுபவித்தற்கு உரிய | என்னை காதுவர் | என்னை இடைவிடாது வருத்துகின்றார்களந்தோ ! |
| தீம் சுவையை | இன் சுவையுள்ள பொருள்களை | | |

*** "மனமாளு மோனரவர் வன்குறும்பர் தம்மை" என்ற ஆழ்வாரருளிச் செயலின்படி கொடிய பஞ்சேந்திரியங்கள் மனத்தைத் தமக்கு உற்ற துணையாகக் கொண்டு சரீரத்திற்கு உள்ளாகவே யிருந்து தம்தமக்கு உரிய விஷயங்களில் விரும்பி என்னுயிரை வருத்திக் கொல்கின்றன—என்றிவ்வளவே பாட்டிலிருந்தாலும், இவற்றை உனது அருளென்னுந் தண்டாலடித்து வலியொடுக்கி எனக்கு நற்கதி யளிக்கவேண்டுமென்று பிரார்த்திப்பதாக சேஷ பூரணம் செய்துகொள்ளத்தக்கது.

## 11. திருவாய்ப்பாடி.

கலந்தமர ரோடும் கரைகண்டா ரோடும்
பொலிந்துதிரு நாட்டிருக்கப் போவீர்—மலிந்தபுகழ்
அண்டராய்ப் பாடி அமலரடி யாரடியார்
தொண்டராய்ப் பாடித் தொழும். (106)

| | | | |
|---|---|---|---|
| | (உலகத்தவர்களே!) | தொழும் | அவரை வணங்குங்கள்; (அங்ஙனம் வணங்கினல்) |
| மலிந்த புகழ் அண்டர் | நிறைந்த கீர்த்தி படைத்த இடையர்கள் | அமரரோடும் | நித்யஸூரிகளோடும் |
| ஆய்ப்பாடி | வாழுமிடமான திருவாய்ப்பாடியி லுறைகின்ற | கரை கண்டா ரோடும் | இவ்வுலகத்தினின்று அக்கரை சேர்ந்தவர்களான முக்தர்களோடும் |
| அமலர் | குற்றமற்ற கண்ணபெருமானுடைய | கலந்து | ஒன்று கூடி |
| அடியார் அடியார் தொண்டர் ஆய் | தாஸாநுதாஸர்க்கு அடிமைப்பட்டவர்களாய் | பொலிந்து | சிறப்புப்பெற்று |
| பாடி | அவரது குணங்களைப் பாடி | திரு நாடு இருக்க | பரமபதத்திலிருக்கும்படி |
| | | போவீர் | செல்வீர்களாக. |

## 12. திருப்பாற்கடல்.

தொழும்பாய நான்நல்ல சூதறிந்து கொண்டேன்
செழும்பா யலைமுத்தஞ் சிந்தி—முழங்கும்
திருப்பாற் கடலான்தாள் சேர்ந்தா ரடிசேர்ந்
திருப்பாற் கடலா மிடர். (107)

| | | | |
|---|---|---|---|
| தொழும்பு ஆய நான் | எம்பெருமானுக்கு அடியவனுகிய நான் | திருப்பாற் கடலான் | க்ஷீராப்தி யென்னும் திவ்விய தலத்திலுறையும் பெருமானுடைய |
| நல்ல சூது அறிந்து கொண்டேன் | நல்லவுபாயத்தை யறிந்து கொண்டேன்; | தாள் சேர்ந்தார் | திருவடிகளை யடைந்தவர்களது |
| | | அடி | திருவடிகளை |
| | (அதாவது) | சேர்ந்து இருப்பார்க்கு | தஞ்சமாகப்பற்றிக் கவலையற்றிருப்பவனுக்கு |
| செழும் பாய் அலை | செழித்துப் பாய்கின்ற அலைகளினுல் | இடர் | ஸம்ஸார துக்கங்களையெல்லாம் |
| முத்தம் சிந்தி முழங்கும் | முத்துக்களைக் கொழித்து ஒலிக்கின்ற | அடல் ஆம் | ஒழித்தல் எளிதிற் கூடும். |

வடநாட்டுத் திருப்பதிகள் முற்றும்.

---

## திருநாட்டுத்திருப்பதி—ஒன்று.

இடருடையேன் சொல்ல வெளிதோ பிரமன்
அடரும் விடையோற்கு மரிதே—தொடருங்
கருவைகுந் தம்பிறவிக் கட்டறுத்து மீளாத்
திருவைகுந் தம்பெறுவார் சீர். (108)

| | | | |
|---|---|---|---|
| தொடரும் | புண்ய பாபரூப கருமபலனுகத் தொடர்ந்து வருவதும் | பெறுவார் | அடையப் பெறுமவர்களினுடைய |
| கரு வைகும் | கர்ப்பத்தினிடத்திற் பிரவேசிப்பதற்குக் காரணமானதுமான | சீர் | சிறப்பானது |
| தம் பிறவி கட்டு அறுத்து | தமது ஜன்ம பந்தத்தை (எம்பெருமானருளால்) அறவேயொழித்து | பிரமனுக்கும் | நான்முகனுக்கும் |
| மீளா | திரும்பி வருதலில்லாததான | அடரும் விடையோற்கும் | போர் செய்யுந் தன்மையுள்ள ரிஷபத்தை வாஹனமாகவுடைய சிவனுக்கும் |
| திரு வைகுந்தம் | ஸ்ரீவைகுண்ட லோகத்தை | அரிது | சொல்ல முடியாதது (என்றல்) |
| | | இடர் உடையேன் | ஸம்ஸாரத்தில் மிகவுழல்கின்ற யான் |
| | | சொல்ல எளிதோ | புகழ்ந்து கூறுதற்கு எளியதாகுமோ? |

திருநாட்டுத் திருப்பதி முற்றும்.

---

மண்ணி லரங்கமுதல் வைகுந்த நாடளவும்
எண்ணு திருப்பதிநூற் றெட்டினையும்—நண்ணுவார்
கற்பார் துதிப்பார் கருதுவார் கேட்டிருப்பார்
பொற்பாத மென்தலைமேற் பூ. 109)

(கருத்து.) *பூமண்டலத்திலுள்ள கோயில் முதலாகத் திருநாடுவரையிலுமுள்ள நூற்றெட்டுத் திருப்பதிகளையும் சென்று சேர்பவர்களும் வாயினாற் சொல்லுபவர்களும் தோத்திரஞ் செய்பவர்களும் மனத்தினால் நினைப்பவர்களும் பிறர் சொல்லக் கேட்டிருப்பவர்களுமாகிய பரமபாகவதர்களின் பொன்னடிகள் என் சென்னிக்கு மலர்ந்த பூவாகு மென்றவாறு.* ... ... .. ... ... *

பதின்ம ருரைத்த பதியொருநூற் றெட்டும்
துதிசெய்ய வந்தாதி சொன்னான்—அதிக
குணவாள பட்டரிரு கோகனகத் தாள்சேர்
மணவாள தாசன் வகுத்து. (110)

(கருத்து.) *மஹா கல்யாண குணசாலியான பட்டருடைய பாதாரவிந்தங்களைத் தஞ்சமென்று பற்றின அழகிய மணவாளதாசன் [— பிள்ளைப்பெருமாளையங்கார் —], ஆழ்வார்கள் பதின்மரும் மங்களாசாசனஞ் செய்தருளிய நூற்றெட்டுத் திருப்பதிகளையும் தோத்திரஞ் செய்யுமாறு, சோழநாடு முதலியனவாகப் பகுத்துக்கொண்டு இந்த அந்தாதி ப்ரபந்தத்தைப் பாடித் தலைக்கட்டியாயிற்று.* ... ... ... *

பிள்ளைப்பெருமாளையங்கார் பணித்த நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி முற்றிற்று.

---

# வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டுக்கும் ஆழ்வார்பாடல் குறிப்பு (மிகச் சுருக்கமாக)

96. திருவேங்கடம். தொண்டரடிப்பொடியாழ்வா ரொருவர் நீங்கலாக மற்ற ஒன்பது ஆழ்வார்களாலும் ஆண்டாளாலும் பாடப்பெற்றது. பதிகம் பாடினவர்கள் நம்மாழ்வார் (இரண்டு பதிகங்கள்), குலசேகராழ்வார் - ஒரு பதிகம். திருமங்கை. நான்கு.

97. சிங்கவேழ்குன்றம். (ஒருவர்பாடல்.) திருமங்கை - பதிகம். பெ. தி. 1-7.

98. அயோத்தி. (இருவர்பாடல்.) பெரியாழ்வார், குலசே.

99. நைமிசாரணியம். (ஒருவர்பாடல்) திருமங்கைபதிகம். 1.

100. சாளக்கிராமம். (இருவர்பாடல்.) பெரியாழ்வார் - துணுக்கை. திருமங்கை 10.

101. வதரியாச்சிரமம். (இருவர்பாடல்.) பெரியாழ்வார்-துணுக்கை. திருமங்கை 20.

102. கண்டமென்னுங் கடிநகர். (ஒருவர்பாடல்.) பெரியாழ்வார் - பதிகம். 1.

103. பிருதி. (ஒருவர்பாடல்.) திருமங்கை. பதிகம் 1.

104. வடமதுரை. (மூவர்பாடல்.) நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள்.

105. துவாரகை. (இருவர்பாடல்) பெரியாழ்வார், ஆண்டாள்.

106. திருவாய்ப்பாடி. ஆண்டாள்.

107. திருப்பாற்கடல்.



108. திருநாடு.

வடநாட்டுத் திருப்பதிகளின் பாடல் குறிப்பு முற்றிற்று.

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் எழுதிய
**அஷ்டப்பிரபந்த விளக்கத்தில்**
**நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதியுரை**
முற்றுப்பெற்றது.